# ஆராய்ச்சி

**AARAICHI**

காலாண்டு ஆய்வு இதழ்



நா. வானமாமலை
ஆசிரியர்

மலர் 5 20 இதழ் 4

# ஆராய்ச்சி

(காலாண்டு ஆய்விதழ்)



உள்ளே



நா. வானமாமலை
ஆசிரியர்—ஆராய்ச்சி
258 திருச்செந்தூர் சாலை
பாளையங்கோட்டை—627002

# CONTRIBUTORS

N. VANAMAMALAI, Editor Aaraaichi

P. L. SWAMY, Civil servant, Pondicherry State, Specialises in research on social anthropology from literary and folklore sources.

V. SIVASWAMY, M.A., Lecturer in charge in Sanskrit, Jaffna campus, Sri Lanka University. He is an epigraphist of repute.

S. VARADARAJULU, M. A. in Tamil specialising in folklore. Tamil Pandit in the Govt High school, Oothangarai, Dharmapuri Dt.

T. MANGAI, Editorial Assistant, Aaraaichi. Interested in folklore circulating among women.

A. PADMAVATHI, M.A., Dip. in Arch & Epi. Works in the Dept of Archaeology. Studies inscriptions with a view to describe the social structure of the Chola period.

J. F. RICHARDS, Associate professor of History and South Asian Studies. Wisconsin University, Madison.

VELCHERU NARAYANA RAO, Asst Professor of South Asian Studies, Wisconsin University, Madison,

---

ஆராய்ச்சி

மலர் 6 ○ ஜூன் 1977 ○ இதழ் 4

# இரு நல்ல முடிவுகள்

சென்ற ஜூலை மாதத்திற்குப் பின் ஆராய்ச்சி தங்களைச் சந்திக்கவில்லை. காரணங்கள் பல. அவற்றுள் முக்கியமானது நான் திராவிட மொழியியல் கழகத்தின் முதுநிலை ஆய்வாளனாக (senior fellow) நாட்டுப் பண்பாடு பற்றி 15-12-75 முதல் 15-12-76 வரைப் பணி புரிந்தேன். தார்வாரி லுள்ள கருநாடகப் பல்கலைக் கழகத்தில் தமிழக நாட்டுப் பாடல் இலக்கியம் பற்றி ஆராய்ச்சி செய்தேன். எனது முழுக்கவனமும் இவ்வாராய்ச்சியிலேயே சென்றது. ஒரு இதழ் ஆராய்ச்சியை வெளியிட எனது மாணவன் மே. து. ராசுகுமாரிடம் பொறுப்பளித்திருந் தேன். அவர் ஒரு இதழை வெளிக் கொணர்ந் தார். அதற்கு மேல் கட்டுரை பெறுவதற்கோ அச்சிடுவதற்கோ எனக்கு நேரம் கிடைக்க வில்லை. செப்டம்பர் மாதம் உடல் நோய் வாய்ப்பட்டது. ஒரு மாதம் எதுவும் செய்ய முடியவில்லை. அதன் பின்னர் என்னுடைய ஆய்வு நூலை முடித்து (505 பக்கங்கள்) திராவிட மொழியியல் கழகத்தினிடம் கொடுத்துவிட்டு நவம்பர் மாதம் ஊர் திரும்பினேன்.

இந்த 20 வது இதழ் முதல் இந்த ஆண்டு நான்கு இதழ்களையும் வெளியிட உறுதியான ஏற்பாடுகள் செய்துள்ளேன். தமிழ் நாட்டி லும், வெளி நாடுகளிலும் ஆராய்ச்சி பெற்றிருக்கும் மதிப்பை நான் உணருகிறேன். எனவே எப்பாடுபட்டாவது ஆராய்ச்சியை வெளிக் கொணர உறுதி பூண்டுள்ளேன். எனது மாணவர்களும் ஆராய்ச்சிக்குழுவும் எனக்கு உதவியாக ஆராய்ச்சியை வெளி யிடும் விஷயத்தில் துணை நிற்க உறுதி கொண்டுள்ளார்கள்.

தமிழகப் பண்பாட்டுலகில் இரண்டு இயக்கங்கள் இப்பொழுது தோன்றியுள்ளன. ஒன்று தொல்பொருள் துறைத் தலைவர் நாகசாமி அவர்களின் முன்முயற்சியால் தோற்றுவிக்கப்பட்டது. வரலாற்றுப் பேரவை என்ற நிறுவனத்தை மாவட்டம் தோறும் அமைத்து கருத்தரங்குகள் நடத்த மாவட்ட ஆய்வாளர்களைத் தூண்டி விடுகிறார். கோவை, செங்கற்பட்டு, திருச்சி மாவட்டங் களில் கருத்தரங்குகள் நடந்துள்ளன. மாவட்டத்தில் முக்கியமான வரலாற்றுச் சிறப்பு மிக்க ஏதாவது நிகழ்ச்சி, ஆவணம், கோவில் கல்வெட்டு பற்றிக் கட்டுரைகள் பெற்றுக் கருத்தரங்கில் விவாதிக்கிறார்கள். மாவட்டத்திற்குச் சிறப்பான வரலாற்றுப் பாதையை இதனால் அறிய முடிகிறது. எல்லா மாவட்டங்களிலும் கருத்தரங்குகள் முடிந்த பின்னர், 20 கட்டுரைத் தொகுப்புகள் கிடைக்கும். இவை இதுவரை வெளிவராத வரலாற்றுச் செய்திகளையும் உண்மைகளையும் வெளிக் கொணரும். கருத்தரங்கு அன்று ஒவ்வொரு மாவட்டத்திலும் ஒரு தொல் பொருள் காட்சி நடத்தப்படும். அதில் அம் மாவட்டத்தில் கிடைத்த தொல்பொருள்கள் பார்வைக்கு வைக்கப்படும். மாவட்டங் களில் வரலாற்று ஆர்வமுடையவர்களைத் திரட்டி, கட்டுரைகள் பெறுவதும், தொல் பொருள் சான்றுகளைப் பெறுவதும், கண்

ஆட்சி மூலம் ஆர்வமுடையவர்கள் புதிதாகத் தெரிந்து கொள்ளப் பல விஷயங்கள் கிடைப் பதும் சாத்தியமாகும். ஒரு அரசுத்துறை வரலாற்றார்வலரோடு தொடர்பு கொண்டு வரலாற்றுத் தொல் பொருள்களைச் சேகரிப் பது மிகவும் பாராட்டத்தக்கதாகும். இவ்வியக்கம் வெற்றி பெற ஆராய்ச்சி வாழ்த்துகிறது.

இரண்டாவது உலகத்தமிழ் ஆராய்ச்சி நிறுவனம் நடத்திய நாட்டுப்புறப் பாடல் கருத்தரங்கு. நாட்டார் பண்பாட்டில் காலம் கடந்து ஆர்வம் தோன்றியுள்ளது. கரு நாடகம், ஆந்திரம், கேரளம் ஆகிய நாடு களில் நாட்டுப் பாடல்கள், நாட்டுப் பண் பாட்டுப் பொருள்களைச் சேகரிப் பதும், ஆராய்வதும் ஆகிய பணி தமிழ்நாட்டைவிட மிகவும் முன்னேறியுள் ளது. இத்துறையில் பல்கலைக் கழகங்களும், ஆராய்ச்சி நிறுவனங்களும் ஈடுபட வேண்டு மென ஆராய்ச்சி பலமுறை வற்புறுத்தி வந்துள்ளது. சிரமமான தயாரிப்புக்குப் பின்னர், மார்ச்சு மாதம் 26, 27 தேதிகளில் கருத்தரங்கு நடைபெற்றது. வந்த கட்டுரைகளை மூன்று பிரிவுகளாகப் பிரிக்க லாம்.

ஒன்று நாட்டுப்பாடல்களில் சில வகை களின் பொதுத்தன்மை பற்றிய ஆராய்ச்சி. இத்துறையில் ஆறு ஆய்வுக் கட்டுரைகள் படிக்கப்பட்டன. தெம்மாங்கில் சில சமுதாய உணர்வுகள், கதைப்பாடல்களின் இயல்புகள், ஒப்பாரியில் காணப்படும் சாதி வேறுபாடுகள், ஒப்பாரியில் பெண்களின் சமூக நிலை, வில்லுப் பாட்டு, திருமணங்களில் பாடப்படும் பரிகாசப்பாடல்கள் என்ற கட்டுரைகள், தமிழக நாட்டுப்பாடல்களை ஒரு நோக்கம் கொண்டு ஆராய்கின்றன. வேறு பதினான்கு கட்டுரைகள் பூகோளப் பிரிவின் அடிப்படை யில் மாவட்ட ரீதியாக நாட்டுப் பாடல்களில் எந்தெந்த வகை எங்கெங்கு வழங்குகின்றன என்று விவரிக்கின்றன. இத்தகைய ஆராய்ச்சி இன்றைய நாட்டுப் பாடல் சேகரிப்பு நிலையில் மிகவும் அவசியமானது. நெல்லை, சேலம், தருமபுரியில் வழங்கும் பாடல்களே, ஓரளவு மிகுதியாகச் சேகரிக்கப்பட்டு தமிழ் நாட்டுப் பாமரர் பாடல்கள், தமிழர் நாட்டுப் பாடல்கள் என்ற இரு நூல்களாக வெளி யிடப்பட்டுள்ளன. தமிழ் நாட்டில் பிறபகுதி களில் வழங்கும் எல்லா வகைப் பாடல்களைச் சேகரித்து வெளியிடும் முயற்சி மிகக் குறைவு தான். இக்கருத்தரங்கு பல மாவட்டங்களில் வழங்கும் பாடல்களைச் சேகரிக்கும் முயற்சி யில் இளம் ஆய்வாளர்களை ஈடுபடுத்தி யுள்ளது. கட்டுரைகளில் பலவகை அரிய பாடல்களை உதாரணங்களாகத் தந்துள்ளார் கள். இன்று முக்கியமான பணி சேகரிப்புப் பணி. அதில் இக்கருத்தரங்கு கருத்தைச் செலுத்தியுள்ளது.

இவ்விரண்டு வகைக் கட்டுரைகள் தவிர இனக்குழு மக்களின் பாடல்களிலும் இக்கருத் தரங்கு ஆரம்ப கவனம் செலுத்தியுள்ளது. இரண்டு கட்டுரைகள் நாட்டார் கலைகளைப் பற்றிப் படிக்கப்பட்டன.

கருத்தரங்கைத் தொடர்ந்து இத்துறை யில் சில பணிகள் மேற் கொள்ள வேண்டும் என்ற கருத்தை உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தின் தலைவர் ச. வே. சுப்பிரமணி யன் தெரிவித்தார். மாவட்ட அல்லது பிரதேசக் கருத்தரங்குகள் நடத்தப்பட வேண்டும்; அதற்கு முன், மாவட்டத்திலுள்ள அல்லது பிரதேசத்திலுள்ள நாட்டுப் பாடல் ஆர்வலர்கள் முடிந்த மட்டும் சேகரிக்க வேண்டும்' தாங்கள் சேகரித்தவைபற்றிக் கட்டுரை எழுதி மாவட்டக் கருத்தரங்கில் படிக்க வேண்டும்.

இவர்களுக்காக எனது தலைமையில் நாட்டுப் பாடல் ஆய்வுக்குழு ஒன்று அமைக்கப்படும்.

இத்திட்டம் ஊக்கத்தோடு நாட்டுப் பாடல் ஆர்வலர்களின் ஒத்துழைப்போடு செயல் படுத்தப்படுமானால் தமிழகத்தின் நாட்டார் இலக்கியத்திற்கும், நாட்டார் கலைகளுக்கும் நல்ல காலம் பிறந்து விட்டது என்றே கூறலாம்.

நா. வானமாமலை

# தாய் தெய்வ வணக்கத்தின் சமூக அடிப்படைகள்

நா. வானமாமலை

தெய்வங்கள், வழிபடுவோரின் வாழ்க்கை முறையில் இருந்து எழுகின்றன. ஒரு சமுதாயம் அதன் உணவு, உடை, உறையுள் ஆகிய புற வாழ்க்கைத் தேவைகளை எந்த முறையில் பெறுகிறதோ, அதற்காக எத்தகைய சமுதாய அமைப்பை உருவாக்கிக் கொண்டுள்ளதோ, அந்த அமைப்பின் அடிப்படையின் மீது தெய்வநம்பிக்கை என்ற மேற்கோப்பு எழும். (எங்கல்ஸ்)

நாகரிக முற்கால வாழ்க்கையை மூன்று கால கட்டங்களாக கார்டன் சைல்டு என்ற புகழ் பெற்ற தொல்பொருள் துறை அறிஞர் பகுத்துள்ளார். இது வாழ்க்கையின் துவக்க காலம்.

1. **மனிதர்கள் உணவு தேடித் திரிந்த காலம்**

வேட்டையாடியும், கனி கிழங்குகளைப் பொறுக்கியும் தோண்டியும் பெற்ற காலம் இவ்வாறுதான் மனித வாழ்க்கை முதலில் தொடங்கியது. இதை வேட்டைக்காலம் என்று அவர் அழைக்கிறார்.

2 **கால்நடை வளர்ப்புக் காலம்**

ஆடு, மாடு, எருமை, ஒட்டகம், குதிரை முதலிய விலங்குகளை உயிரோடு கொணர்ந்து பழக்கி வளர்த்த காலம்.

3 **புராதன விவசாயம் செய்து உணவின் ஒரு பகுதியைப் பெற்ற காலம்**

இக்கால மக்கள் கற்கருவிகளைப் பயன் படுத்தியவர்கள் என்பதை நினைவில் கொள்ள வேண்டும். கல்லெறிந்தும், கவண் மூலம் கல்லைக்குறி பார்த்து எறிந்தும் கல் ஈட்டி, கல் கோடரிகளைப் பயன்படுத்தியும் விலங்குகளைக் கொன்றனர். இக்கால மக்கள், மந்திரம், மந்திரச் சடங்குகள், வனதேவதைகள், பேய்கள், அவற்றை அடக்கக்கூடிய வலிமையுடைய பல தெய்வங்களை நம்பினார்கள். குழு நடனங்களையும் தமது பயத்தைப் போக்கிக் கொள்ளப் பயன்படுத்திக் கொண்டனர்.

தமிழ் நாட்டில் ஆர்—அர மகளிர் என்ற பயமூட்டும் பெண் தெய்வங்களை நம்பினர். வான்—அரமகளிர் என்று வானத்தில் உலவும் பெண் தெய்வங்களையும் நம்பினர் பாவை என்ற உருவங்களில் அவற்றை வழி பட்டனர். கொல்லிப்பாவை என்ற தெய்வம் கண்டவரைக் கொன்று விடும் என்ற நம்பிக்கை கொண்டிருந்தனர். இவை தவிர பல்லாயிரம் பிசாசுகளும், பேய்களும் இறந்தவர் ஆவிகளும், தங்கள் வாழ்க்கையில் தலையிடுகின்றன என்ற நம்பிக்கை அவர்களுக்கு இருந்தது

அவர்களுடைய வாழ்க்கைக்கு மழை தேவையாக இருந்ததால், மழையை மாரி யென்ற தெய்வமாக வழிபட்டனர். மாரி பின்னர், தொத்து நோய்களை உண்டாக்கும் தெய்வமாக மாறி விட்டது வடநாட்டில் நூற்றுக்கணக்கான நோய்த் தெய்வங்களும் பாம்புத் தெய்வங்களும், இயற்கை சக்திகளும் வணங்கப்பட்டன அவர்கள் மலை, வானம், காடு, முதலிய இடங்களில்

இயற்கைக்கு அதீதமான சக்திகள் இருக்கின்றனவென்று நம்பி அவற்றைப் பற்றி அச்சம் கொண்டிருந்தனர். அச்சத்தின் காரணமாகவே அவற்றை வழிபடவும் பலி கொடுத்து அவற்றைத் திருப்திப் படுத்தவும் முயன்றனர் அவர்களது தெய்வ வணக்கம் அச்சத்தை அடிப்படையாகக் கொண்டிருந்தது.

கால்நடை வளர்ப்புக் காலத்தில் வாழ்க்கைத் தேவைகள் அதிகரித்தன. கால்நடைகளுக்குத் தேவையான, புற்பூண்டுகள், தழைகள் நீர் முதலியன கிடைக்கிற இடங்களைத் தங்கள் வாழ்விடங்களாகக்கொள்ள வேண்டிய நிலைமை ஏற்பட்டது. இப்பொழுதும் வானத்தை நம்பியே அவர்கள் வாழ்ந்தனர். மழையே அவர்களுக்கு முக்கியமானதாக இருந்தது. எனவே மழைத் தெய்வம் அவர்களுடைய பிரதானத் தெய்வமாக இருந்தது. வருணனும் மித்ரனும் மாபெரும் தெய்வங்களாகப் போற்றப்பட்டன. ஆடு மாடுகளை வனவிலங்குகளிலிருந்தும் மனிதர்களிடமிருந்தும் பாதுகாக்கவேண்டியிருந்தது. அதனால் ஆடு மாடுகளைப் பாதுகாக்கும் சக்தியுடையவர்கள் எனக் கருதப்பட்ட சக்திகள் தெய்வங்களாகப் போற்றப்பட்டனர். தெய்வங்கள் விலங்குகளோடு தொடர்புபடுத்தப்பட்டன. இயற்கைப் பொருள்கள் வானத்துப் பொருள்கள் அவர்கள் உள்ளங்களில் பெருமதிப்புப் பெற்றன. கிரேக்க, இந்திய, சுமேரிய நாகரிகங்களில் 'வானக்கடவுள்' முக்கியமான தெய்வமாயிற்று (Sky God—The Supreme god of Vedic Hindus and Iranians) ஆரியர் சமூக வாழ்க்கையில் முதலில் வருணனும், பின்னர் இந்திரனும் புகழ் பெற்றனர். வருணன் வலையைத் தனது கருவியாகக் கொண்டிருந்தான் இந்திரன் எலும்பினாலான வஜ்ராயுதத்தைப் பயன்படுத்தினான். இவர்களில் எவரும் உலோகங்களினால் செய்யப்பட்ட கருவிகளைப் பயன்படுத்தவில்லை பிற்காலப் புராணங்கள் வேல் ஈட்டி, அம்பு முதலிய இரும்புக் கருவிகளைப் பயன்படுத்தியதாகக் கூறுகின்றன. ஆரியருடைய தெய்வங்கள், கால்நடை வளர்ப்புக் காலத்தில் அவர்கள் சிந்துசமவெளியை அடைந்த காலத்தில் அவர்கள் கொண்டு வந்தவை அதற்கு முன்னர் அவர்கள் ஈரானிலும், மத்திய ஆசியாவிலும் வசித்த காலத்தில், அவர்களால் வணங்கப்பட்ட தெய்வங்கள் குறித்து வேதங்களில் கூறப்படவில்லை வேதங்களில் குறிக்கப்படும் தெய்வங்களில் சில கால்நடை வளர்ப்புக் காலத்துக்கு முந்தியவை ஆகலாம்.

புராதன விவசாயக் காலத்தில் அவர்கள் புற உலக வாழ்க்கைக்குப் பூமியே முக்கியமானது. செழிப்புத் தெய்வங்களும், மந்திரச் சடங்குகளும் பூமியின் செழிப்புத்திறனை மிகுதியாக்கக் கற்பனை செய்யப்பட்டு உருவாக்கப்பட்டன. செழிப்புத்திறன் பெண்களுக்கே உண்டு என்ற நம்பிக்கை தோன்றிற்று. பெண்கள்தான் முதலில் வேட்டைத் தொழிலில் இருந்து பிரிந்து விவசாயத்தைச் செய்ய ஆரம்பித்தனர். பூமியின் விதையைச் செடியாக வளர்க்கும் திறனுக்கும் குழந்தையைப் பெறும் சக்திக்கும் தொடர்பு உண்டு என்று புராதன விவசாயத்தில் ஈடுபட்ட மக்கள் நம்பினர். எனவே விவசாய மந்திரச் சடங்களில் பெண்களே பங்கு கொண்டனர். மரத்தில் காய்கனிகள் செழிப்பாக வளருவதற்கு என்ன செய்ய வேண்டும் என்பது பெண்களுக்குத் தெரியும். ஏனெனில் அவர்களுக்குக் குழந்தையைப் பெறத் தெரிகிறது. பிள்ளை பெறத்தெரியாதவளுக்கு மரங்களையும் செழிப்படையச் செய்ய முடியாது. கருவுற்றிருக்கும் பெண் விதை விதைத்தால், அவை ஒன்று, நூறாக பல்கும். இது தொத்து மந்திர முறை என்று மானிடவியலாளரால் அழைக்கப்படும். (Contagious magic)

பூமியை உயிருள்ள, உயிரில்லாத அனைத்திற்கும் தாய் என்று அவர்கள் கருதினர். தத்துவச் சிந்தனை வளர்ச்சிபெற்ற காலத்தில் பூமி, பிற உலகங்கள் எல்லாம் ஒரே ஜகன் மாதாவிலிருந்து தோன்றின என்று நினைத்தனர். இவ்வாறு தாய்த் தெய்வம் மக்கள் உள்ளத்தில் தோற்றமெடுத்தது. செழிப்புத் தெய்வங்களும் தோன்றின.

ஸ்டார் பிரச் கூறுகிறார்.

1 "தெய்வங்களில் பெண் தெய்வங்கள் உயர்ந்த ஸ்தானத்தில் வைத்து வணங்கப் பட்டன. பெண்ணுக்குச் சமுதாய வாழ்க்கையில் எவ்வித ஸ்தானம் இருக்கிறதோ, அதன் அடிப்படையிலேயே பெண் தெய்வங்களுக்கும், மதிப்போ, அவமதிப்போ இருக்கும். இனக்குழு வாழ்க்கையில், குலத்தில் ( la ) பெண்ணே, தாயாகவும் தலைவியாகவும் இருக்கிறாள். இந்த நிலையில் சமுதாயத்தில் தாய்த்தெய்வம் எல்லாத் தெய்வங்களுக்கும் மேலாகத் தலைமை பெறுகிறது. ஆண் தெய்வங்களைவிட, பெண் தெய்வம் உயர்ந்த ஸ்தானத்தைப் பெறுகிறது."

2 வேட்டை முற்காலச் சொத்து பெண் வழியில் இறங்கியதால் பெண்களுக்குச் சமுதாயத்தில் உயர்ந்த மதிப்பு இருந்தது"

இரண்டாவதாகக் கூறப்படும் பகுதி உண்மையாக இருக்க முடியாது வேட்டை முற்கால சமுதாயத்தில் மிகவும் புராதனமான கற்கருவிகளே இனக்குழுக்களுக்குச் சொந்தமாயிருந்தன. அவை குழு முழுவதற்கும் சொந்தமாயிருந்தன. ஆண், பெண் என்ற பிரிவினையின்றி, அவை குழுவிற்கு உரிமையாயின. விவசாயம் துவங்கிய பின்னர் தான் நிலம் சொத்தாயிற்று அது பலவேறு விதங்களில் பொதுவுடைமையாயிருந்தது

வேட்டைக் காலத்திலேயே இனக்குழுவினுள் வேலைப்பிரிவினை ஏற்பட்டது. பெண்கள் தாவர உணவு தேடுவதிலும். ஆண்கள் வேட்டையாடுவதிலும் ஈடுபட்டிருக்க வேண்டும். தற்கால இனக்குழு வாழ்க்கையிலும், வேட்டைக்கால வளர்ச்சி நிலையிலுள்ள 'உணவு தேடும்' மக்களைக் காண்கிறோம். அவர்களிடமும் ஆண்—பெண் வேலைப் பிரிவினை காணப்படுகிறது. இது போன்றே பண்டைய வேட்டைக் காலத்தில் இயற்கையாகத் துவங்கிய தாவர உணவு தேடுகிற வேலைப்பிரிவினை, பெண்கள் தாவரங்கள் பற்றிய அனுபவ அறிவு பெறும் வாய்ப்பை அளித்தது. அவர்கள் விவசாயத்தில் ஈடுபடத் தொடங்கினர். வேட்டை மூலம் கிடைக்கும் மாமிச உணவைவிட, நம்பத்தகுந்த விளைச்சலை பெண்கள் உற்பத்தி செய்தார்கள். எனவேதான் உலக முழுவதிலும், செழிப்பைக் குறிக்கும் தெய்வங்கள் பெண் தெய்வங்களாகவே இருக்கின்றன. பூமியும் பெண் தெய்வமாகவே கருதப்படுகிறாள்.

கல்லினால் செய்யப்பட்ட குத்துக்கோல் பின்னர் சூலாயுதமாக மாறிற்று. உலோக காலத்தில் செம்பினால் செய்யப்பட்ட சூலாயுதம் விவசாயக் கருவியாகப் பயன்பட்டது வேட்டைக் கருவியாக இருந்த கருவிகளே, விவசாயத்திலும் பயன்பட்டன ஒரே கருவி கொண்டு விவசாயமும் செய்தார்கள், வேட்டையும் ஆடினார்கள் இக்கருவியே இன்றும் உழவர் மக்களிடையே தெய்வத்தைக்குறிக்கும்அறிகுறியாய் உள்ளது. மிகவும் 'தாழ்ந்த' சாதியாருடைய கோயில்களில் சூலாயுத்தையே வணங்குகிறார்கள். இதுவே முற்காலத்தில் பெண் தெய்வங்களின் போர் ஆயுதமாகவும் கருதப்பட்டது 'சூலி என்ற சொல் சூலாயுதத்தை உடையவள் என்றும் சூல் கொண்டவள் என்றும் பொருள்படும். உலகைச் சூல் கொண்டு பெற்றவள் என்று அவளைக் கருதுகிறார்கள். சில கோயில்களில் பொந்தந்தடி என்ற வேட்டைக் கருவியை வணங்குகிறார்கள்.

இவ்வாறு பெண் தெய்வங்கள் உலகப் படைப்புக்குக் காரணமான மூலதெய்வமாகக் கருதப்பட்டதற்குக் காரணம், **பெண்கள் விவசாயத்தின் மூலம் சமூக ஆதிக்கம் பெற்றிருந்ததுதான்.**

தோட்ட விவசாயத்தில் உழைப்பை ஈடுபடுத்திய பெண்கள், தானிய உற்பத்தியில் உழைப்பைச் செலுத்தத் தொடங்கினர் இக்காலத்தில் பெண்களின் உழைப்பினால் கிடைத்த உணவு, ஆண்களின் தொழிலான வேட்டையிலிருந்து கிடைத்த உணவைவிட மிக அதிகமாயிருந்தது. சமூகத்தின் உணவுத் தேவையைப் பூர்த்தி செய்வதில் பெண்கள்

உழைப்பு பிரதானமாக இருந்ததால் பெண்களுக்கு சமூக மதிப்பு உயர்ந்தது. இந்த சமூக மதிப்பின் வெளிப்பாடாக சக்தி வாய்ந்த தெய்வங்கள் பெண் தெய்வங்களாகவே இருந்தன. மூலதெய்வம் பெண் தெய்வமாகவே இருந்தது.

இவ்வாறு காளைகளால் இழுக்கப்பட்ட கலப்பையைக் கண்டுபிடிக்கும் வரை பெண்ணுதிக்க நிலையும் நீடித்தது. கலப்பை விவசாயம் ஆண்களுடைய தொழில். அவர்களால் விளைவிக்கப்பட்ட தானியம் சமூகத்தின் வளர்ந்திருக்கும் தேவைகளைப் பூர்த்தி செய்யவும் உபரியாகவும் ஆகும்பொழுது பெண்களின் ஆதிக்கத்தை எதிர்த்து, ஆண்கள் தமது ஆதிக்கத்தை நிறுவ முயன்றனர். இந்த நிலையை உலகப் படைப்புப் புனை கதைகள் காட்டும். உலகம் தோன்றிய கதைகளில் மிகப்புராதனமானவை, ஒரு பெண்ணின் உடலிலிருந்து உலகம் தோன்றிய நாகக்கூறும். அதன் பின்னர் தோன்றிய கதைகளில் பெண்ணுதிக்க உலகத்தை அழித்து உலகத்தை மறுபடைப்புச் செய்தவன் ஆணுகவே இருப்பான். பெண் தெய்வங்களான, பிசாசுகள், பூதங்கள் இவற்றிற்கும் ஆண் தெய்வங்களுக்கும் பெரும் போர் நடந்து, ஆண் தெய்வங்கள் வெற்றி பெறுவார்கள். பிறகு ஆண் ஆதிக்கம் நிலைநிறுத்தப்படும். எகிப்து, பாபிலோனியா, ஆரியருக்கு முந்திய இந்தியா இவற்றில் காணக்கிடக்கும் புராணக் கதைகள் இதனைத் தெளிவாக்கும் இக்கதைகள் புராதன விவசாய நிலையிலிருந்து காளைபூட்டிய கலப்பை விவசாயத்திற்கு வாழ்க்கைமுறை மாறுகிற புரட்சியைக் குறிப்பிடும்.

மனித வாழ்க்கையில் சூலம் அல்லது ஈட்டி வேட்டையிலும், விலங்குகளை மனிதனது கட்டுப்பாட்டின் கீழ் கொண்டு வருவதற்கும் பயன்படுத்தப்பட்டது. தோட்ட விவசாயம், வயல் விவசாயமாயிற்று. பூமியில் குழிதோண்டும் கருவியைப் பயன்படுத்தி விவசாயம் செய்ததை விடுத்து காளை பூட்டிய ஏரைப் பயன்படுத்திப் பயிர் செய்ய ஆரம்பித்தார்கள்.

இந்த மாறுதல்கள், பெண்களின் தொழிலாயிருந்த விவசாயம், ஆண்களின் தொழிலாக மாறுவதற்குக் காரணங்களாயின. இந்த மாறுதலின்ல் துவக்கத்திலிருந்து பழைய கருவிகளை வழிபட்ட மக்கள் காளைகளையும் வழிபடத் துவங்கினர். பரமசிவன் வேட்டையாடுபவர்களின் தெய்வமாகப் புலித்தோல் போர்த்திருந்தவர், ரிஷபாரூடரானுர். கங்கையைத் தலையில் வைத்தார். மாதொரு பங்குவைத்தார். 'இந்த உற்பத்தி முறை மாற்றங்களுக்கேற்ப பெண்வழி உரிமை, ஆண்வழி உரிமையாக மாறிற்று.'' (தாம்ப்ஸன்)

பெண்ணுதிக்க சமுதாயத்தில் தாய் வழி தான் குறிப்பிடப்பட்டது. 'இவள் மகன் இவன்'' என்றுதான் ஆண்கள் அழைக்கப்பட்டனர். கால் நடை வளர்ப்புத் தோன்றி வளர்ச்சி பெற்றதும் **'இவன் மகன் இவன்''** என்று ஆண்கள் அறிமுகப்படுத்தப்பட்டனர். பைபிளில் குறிப்பிடப்படுபவர்கள் ஆண்வழி உரிமையிலேயே அழைக்கப் படுகிறுர்கள் (இவன் மகன் இவன்).

1916ல், மோஹன்ஜதரோ தொல் பொருள்கள் கண்டுபிடிக்கப் படுவதற்கு முன்னுல் ஒரு ஆய்வாளர் எழுதினுர்:

''சர்வசக்தி வாய்ந்த தேவி என்ற கருத்தை வேதகால ஆரியர்களுடைய காலத்துக்கு முன்பு, ஆசியாமைனர் சிரியா எகிப்து முதலிய மத்தியதரைக் கடற்கரை நாடுகளில் காணலாம். இந்திய சாக்தேயர்களது தேவி' கருத்தையொத்த கருத்துக்களையும் வழிபாட்டு முறைகளையும் சடங்காசாரங்களையும் அந்நாடுகளின் பண்டைய நாகரிகத்தில் காணலாம்''

அந்நாடுகளில் சக்தி வழிபாட்டில் **சடங்காசாரப் புனிதப் புணர்ச்சி** வழக்காயிருந்தது.

நம் நாட்டுத் தாய் தெய்வங்களைப் போன்ற இயல்புகளைக் கொண்ட, செமிடிக் நாடுகளைச் சேர்ந்த **'அஸ்டார்டே'** என்ற

தெய்வமும், எகிப்திய தெய்வமாக 'ஐஸிஸ்' என்ற தெய்வமும், பிரிஜிய நாட்டைச் சேர்ந்த 'ஸைபீல்' என்ற தெய்வமும் வணங்கப்பட்டு வந்தன.

சாங்கிய தத்துவத்தில், "உலகில் வேறுபட்ட பல்வகையான உருக்கள் தோன்றுவதற்கு முன் வேற்றுமையற்ற ஒரே பொருள் தான் இருந்தது" என்ற அடிப்படையான பொருள் முதல்வாதக் கருத்து இருந்தது இதனைப் 'பிரக்ருதி' என்று தத்துவ வாதிகள் அழைத்தனர். இது ஓர் தத்துவக் கருத்தாகத் தான் இருந்தது. ஆனால் புராணகாலத்தில், இக்கருத்திற்குப் புறவடிவம் கொடுத்து, பிரக்ருதி என்ற மூலப்பொருளுக்கு பெண்மையென்னும் இயல்பை ஏற்றி, அதற்கு உணர்வு என்னும் புருஷனையும் கற்பித்தார்கள். ஆனால் உணர்வு என்னும் புருஷன் தோன்று முன்னரே, பிரக்ருதி படைப்பதற்கு ஆசை கொண்டாள். ஜகன்மாதாவாக உருக்கொண்டு அவள் தனது உடலிலிருந்து பிரம்மா, விஷ்ணு, சிவன் ஆகிய மூன்று கடவுளர்களையும் படைத்தாள். அவர்களில் பிரம்மா, உலகங்களையும், பொருள்களையும் உயிர்களையும் பிரக்ருதியிலிருந்தே படைத்தான். பிரக்ருதி என்ற பொருள், பெண் தன்மை கொண்டது, படைக்கும் திறனுடையது என்ற கருத்து புராணங்களின் படைப்புக் கதைகளில் இருந்து விளங்கும்.

மோஹன்ஜதரோவின் 'தாய்த்தெய்வம்' இப்பொழுது ஆய்வாளர்களுக்குத் தெரிந்தது தான். அத்தலத்தில் அகழ்வாய்வுகள் செய்த மார்ஷல் கூறுகிறார்:

"முதலில் இங்கு புராதனத்தாய் தெய்வ வணக்கம் இருந்தது. இதன்பிறகு அவ்வணக்க முறையிலிருந்தே ஒரு கருத்துத் தோன்றியது தேவி என்ற தனித்தெய்வம், அழிவில்லாத, சர்வசக்தி வாய்ந்த பெண் தத்துவமாகக் கருதப்பட்டது

சாங்கியத்தின் பிரக்ருதி (பிரதானம்) தான் படைக்கும் ஆற்றல் உள்ளது. எல்லா உருக்கள் தோன்றுவதற்கு உடலாயுள்ளது. பரிணாம முறையில் அதுவே உலகில் தோன்றுகிற எல்லாப் பொருள்களும், உயிர்களும் தோன்றக்காரணம். பிரக்ருதியின் படைப்பே உணர்வு. இதைப் புருஷன் என்றும் அழைக்கிறார்கள் புருஷன் சக்தியற்றது சாட்சியமானது. பிரக்ருதியின் செயலின் விளைவுகளை சாட்சியாக நின்று காண்கிறது. இதுவே பிரக்ருதிபற்றியும் புருஷன்பற்றியும் பூர்வசாங்கியவாதிகள் கொண்டிருந்த கருத்து. இக்கருத்துக்கள் முற்றிலும் பொருள் முதல்வாதமாக இருந்ததால், பிற்கால தெய்வவாதிகள், ஆன்மீகவாதிகள் இதன் கருத்துக்களை மாற்றினார்கள். முந்திய சாங்கியம் நிரீஸ்வர சாங்கியம் என்ற பெயர் பெற்றது. காரணம் அந்தத் தத்துவம் ஈஸ்வரன் என்ற கர்த்தாவை ஒப்புக்கொள்ளவில்லை. மறுக்கவே செய்தது. பிற்கால ஆத்திகர்கள் இந்நிலையை மாற்றி புருஷன் என்ற சாங்கிய தத்துவத்தைக் கடவுளாக மாற்றி, சாங்கியத்தில் அதற்கில்லாத குணங்களை அதற்குக் கற்பித்து 'கடவுளோடு சேர்ந்த சாங்கியம்" என்று பெயரிட்டார்கள். அதுதான் "சேஸ்வர சாங்கியம்" என்பது. ஈஸ்வர கிருஷ்ணன் என்ற தத்துவாசிரியர் 'ஸாங்கிய காரிகை' என்ற கபிலரது மூல நூலைக் கண்டுபிடித்து விட்டதாகக்கூறி அதற்கு உரையெழுதினார். உண்மையில் மூலமும் அவருடைய படைப்பே என்று தற்காலத் தத்துவாசிரியர்கள் நம்புகிறார்கள். சாங்கிய சூத்திரம் என்ற நூலையும் அவர் எழுதியுள்ளார். இது கி பி முதல் நூற்றாண்டில் எழுதப்பட்டது. இவர் எழுதிய நூலில் தான் புருஷனைச் சகல சக்திவாய்ந்த ஈசுவரனாக சாங்கியத்தின் தத்துவப்போக்குக்கு முன்பிருந்தே பிரக்ருதி படைப்பாற்றல் கொண்டிருப்பதால், பெண்மை என்ற இயல்பு அதற்குண்டு எனக் கருதப்பட்டது. புருஷனுக்கு ஏற்றம் தோன்றிய— அவர்களுக்குப் பொருளாதார, சமூக ஆதிக்கம் ஏற்பட்ட பிறகுதான் புருஷனுக்கும் சக்திக்கும் நிகழ்ந்த சண்டைகள் பல புராணங்களில் விவரிக்கப்படுகின்றன. ஆரம்பத்தில் பல போர்களில் புருஷன் (சிவன்) தோற்றுப் போனதாகவும், கடைசியில் பிரகிருதியை வென்று விட்டதாகவும் புராணக் கதைகள் இருக்கின்றன.

பிரக்ருதியையே உலகமாதா (ஜகன் மாதா) என்றழைத்தனர். இதில் ஒரு முரண்பாடு உள்ளது. அவள் சிவனின் மனைவி. அதே சமயம் சிவனைப்படைத்தவளும் அவளே சிவனைப் படைத்து, அவனையே தான் படைப்பதற்குத் துணையாகக் கொண்டாள்.

பல குமரித் தெய்வங்கள், இந்தியாவில் உள்ளன. மாரி, காளி, இசக்கி, முப்புடாதி (முப்புரதேவி) போன்ற திருமணம் ஆகாத தெய்வங்கள் தமிழ்நாட்டில் வணங்கப்படுகின்றன. இவற்றில் கன்யாகுமரியைத் திருமணம் செய்துகொள்ள சிவன் முயன்று தோற்ற கதைகள் சுசீந்திரத்திலும், கன்யாகுமரியிலும் வழங்குகின்றன. இத்தெய்வங்கள் படைப்புத் தெய்வங்களாகவும் கருதப்படுகின்றன. அவ்வாருனல், இவை ஆண் உதவியின்றிப் படைக்கின்றன என்ற கருத்து உள்ளது பண்டைக்காலத்தில் குழந்தைப் பிறப்பில் ஆணின் பங்கு (role) அறியப்படாமல இருந்த காலத்தில் பெண்ணே குழந்தை பெறுவது அனுபவ அறிவாகத் தெரிந்த காலத்தில் உருவாக்கப்பட்ட தெய்வங்கள் குமரித்தெய்வங்கள் திருமணமாகாமலும் இருக்கின்றன, உலகைப் பெறவும் செய்கின்றன.

கலப்பை விவசாயம் சமூக வாழ்க்கையை மாற்றியதுபோல அகஉலகக் கருத்துக்களையும் மாற்றிவிட்டது. கலப்பை விவசாயத்தில் ஆண் இனத்தின் உழைப்பு அதிகமாகப் பயன்படுவதாலும் தானிய உற்பத்தியில் பெரும் பகுதி அவர்கள் உழைப்பால் கிடைப்பதாலும், முதலில் பெண்ணுக்கு ஆண் சமம் என்ற நிலைமை தோன்றிப் பின்னர், ஆணுக்குப் பெண் தாழ்ந்தவள் என்ற ஆணுதிக்க சமுதாயம் நிலைத்து விட்டது.

ஹாரப்பா, மோகன்ஜதரோ தலங்களில் 3000 ஆண்டுகளுக்கு முன்வாழ்ந்த மக்கள் விவசாயப் பொருளாதார அமைப்பினைக் கொண்டிருந்தார்கள் என்பதும் தாய்த் தெய்வ வணக்கத்தை மேற் கொண்டுருந்தார்கள் என்பதும் சான்றுகளால் தெளிவாகிறது அவர்கள் கோதுமை, பார்லி, பட்டாணி, பேரீச்சை முதலியனவற்றைப் பயிர் செய்தார்கள் 160' 135' நீள அகலமுள்ள இரண்டு தானியப்பாதுகாப்பு அறைகள் அங்கு காணப்பட்டன அவர்களுடைய சமுதாய வாழ்க்கையில் செல்வம் குவித்து வைக்கப்பட்டது. இவர்கள் கால்நடைச் சொத்தை மிகுதியாக வைத்திருக்கவில்லை தானியத்தைச் சேமித்து வைத்திருந்தார்கள்.

ஹாரப்பாவிலும், மோஹன்ஜதரோவிலும் இதுவே சமூக நிலைமை. ஏருழவு தோன்றிக் கொண்டிருக்கிற நிலைமையில் இவர்கள் வாழ்ந்தார்கள். பெண் தெய்வங்களுக்குப் பெருமதிப்பு இருந்தது. ஆண் தெய்வங்கள் (பசுபதி) இருந்த போதிலும் பெண் தெய்வங்களே பிரதானமானவையாக இருந்தன.

ரிக்வேதகாலத்தில் ஆரியரது சமயத்தில் ஆண் தெய்வங்களே மதிப்புடையவையாக இருந்தன. கால்நடை வளர்ப்பின் ஆதாரப் பட்ட சமுதாயம் அவர்களுடையது. அவர்கள் விவசாயத்தை விரும்பவில்லை. அவர்கள் விவசாய வாழ்க்கையை மேற்கொள்ளவில்லை. வேதங்களில் இயற்கை தெய்வங்களும், கால்நடை வளர்ப்பிற்கேற்ற தெய்வங்களும் வணங்கப்படுகின்றன. ஆண் தெய்வங்களை விடச் சக்தி வாய்ந்த பெண் தெய்வங்கள் வேத வழிபாட்டில் இல்லை.

எனவே வேத முற்கால மக்களது சமய வாழ்க்கையில் தோன்றியவைதான் தாய்த் தெய்வமும் மற்றப் பெண் தெய்வங்களும். சக்தி வழிபாடு வேத வழிபாட்டிற்கும், சடங்காசாரங்களுக்கும் முரணுனது. பல தெய்வ வணக்கம் வேத வழிபாட்டில் உள்ளது. ஒவ்வொரு தெய்வத்தை, ஒவ்வொரு நோக்கத்திற்காக வழிபட வேண்டும். சில வேளைகளில் வழிபாடே இல்லாத, சடங்குகளை, மந்திரங்களை உச்சரிக்க வேண்டும் நமது சடங்குகள், விளைவுகளை ஏற்படுத்த வல்லது வேதங்களின் கடைசிப் பகுதிகளில்தான் தத்துவமும், ஒரு தெய்வ வணக்கமும் காணப்படுகிறது. வேதத்தின் பெருந் தெய்வங்கள் ஆணுருவில் உள்ளவையே!

பல வேறு பகுதிகளில் இருந்த தாய்த் தெய்வங்கள், செழிப்புத் தெய்வங்கள் நோய்த் தெய்வங்கள் இவற்றைப் பல புராணக்கதைகள் இணைத்து ஒன்றுக்க முயன்றன. ஒரே பராசக்தியின் பல தோற்றங்கள் என்ற ஒரு தத்துவக் கருத்தை முன்வைத்தன. ஆயினும் சக்தியின் தோற்றங்கள் என்று கருதப்படுபவை, ஒவ்வொரு காலத்தில், வணங்கப்பட்ட தனித்தனித் தெய்வங்கள் லலித சகஸ்ரநாமத்தில் 1000 பெயர்களும், வருணனைகளும் உள்ளன. இவையனைத்திலும் இரத்தத்தோடு பெண் தெய்வங்கள் சம்பந்தப்பட்டுள்ளன. காளிமட்டும்தான் கருநிறம் படைத்தவள். ஆனல் இரத்தத்தை விரும்புவாள். இத்தெய்வங்கள் பெண்ணுதிக்க சமுதாயத்தில் தோன்றும். இன்னும் விவசாயத்தில் ஈடுபடக்கூடிய சாதிகளால் வழிபடப்படுகின்றன. சக்தி வழிபாடு வேதாந்திகளால் வெறுத்து ஒதுக்கப்படுகிறது. நமது சமயங்கள் பொருந்தாதன எல்லாவற்றையும் பொருந்த வைக்கும் பெருந்தன்மையினுல் முரண்பாடுகளை மழுங்கடித்துச் சக்தி வழிபாட்டை, வேதாந்தியும் ஒப்புக்கொள்ளுகிற நிலையைக் காண்கிறோம்

பரமார்த்திக உண்மையென்றும் விவகாரிக சத்தியம் என்றும் பிரித்து, உண்மையில் உண்மையல்ல, பொய்யில் உண்மையானது என்றும் இருவகையான உண்மைகளை வேதாந்திகள் கருத்தில் கொண்டுள்ளார்கள். அதில் சக்திவழிபாடு விவகாரிக சத்தியம். சக்தி வழிபாட்டை, பிரம்மத்தியானமாக ஆக்க சங்கரர் முயன்றுள்ளார். விவசாய உழைப்பாளிகளிடம் ஆழ்ந்து வேரூன்றி விட்டதால் வேறு சமயக் கருத்துக்களால் இதனை அழிக்க இயலவில்லை.

எல்லா வகையான மத நம்பிக்கைகளையும் அழித்துவிடும் விஞ்ஞானம் ஒன்றே இந்த நம்பிக்கைகளை அழிக்கும். காரியங்களுக்குக் காரணம் கண்டு பிடிக்கப்பட்டு நிரூபிக்கப் படும்பொழுது கற்பனையான காரணங்களுக்கும் இயற்கைக்கு அதீதமான சக்திகளுக்கும் ஆதாரமில்லாமல் போய்விடுகிறது.

## BIBLIOGRAPHY


1. Gorden Child, Study of Anthropology
2. B. N. Bhattacharya, Indian Mother Goddess, India Pubilications, Calcutta.
3. A. A. Paine, Shaktas and their clut.
4. The holy Bible, Old testaments.
5. Editorial Board, Myth and legend-Comparative religion.
6. F. Engels, Origin of family, private property and state.
7. Philip Rausar, Tantra, Vikas, Delhl
8. Marshal, Mohenjadaro Excavations.
9. J. G. Frazer, The golden bough Vol II
10. Marx, Engels, On Religoin.
11. Mythology of Babylon and Assyria,
12. Hamlyn Series, Egyptian mythology.
13. Lalitha Sahasranama
14. பி. எல். சாமி, தாய்த் தெய்வ வழிபாடு

# ஒப்பாரியில் பெண்களின் சமூக நிலை

டி. பங்கஜ

ஒப்பாரி தாய், தகப்பன், அண்ணன், தம்பி முதலிய உறவினரை இழந்த உணர்ச்சியில் பெண்கள் பாடும் நாட்டுப்பாடல். சடங்குமரபாக கடலூரிலுள்ள தேனும் பட்டினத்தில் ஆண்கள் பெண்ணுடையணிந்து தாலிகட்டிக்கொண்டு ஒப்பாரி பாடி அழுவார்கள். கட்டியதாலியை அவ்வூரிலுள்ள கூத்தாண்டார் கோயிலின் முன் அவிழ்த்தெறிந்து மேலும் பாடல்களைப் பாடுவார்கள். அவர்கள் பெண்கள் உடையில் தாலிகட்டிக் கொண்டு பாடுவது இது பெண்களுக்கே உரியபாடல் வகை என்பதைக் காட்டும்.

மரணத்தினால் ஏற்படும் துன்ப உணர்வை மட்டுமல்லாமல், பெண்குலத்தின் சமூக நிலையையும், பாதுகாவலனான கணவனோ தந்தையோ இறந்து போனவுடன் ஏற்படுகிற மாறிய நிலைமைகளையும் பற்றிப் பாடுகிறாள். இப்பாடல்களிலிருந்து பெண்ணின் பிறந்த வீட்டு உறவுகளையும், தாய் இறந்தபின் மாறிய உறவு நிலைகளையும் கணவன் வீட்டு உறவுகளையும், அவன் இறந்த பிறகு, மைத்துனர்கள் அவர்களது மனைவியரோடு உள்ள உறவுகளையும், இவையனைத்திற்கும் பெண்களுக்குச் சொத்துரிமையின்மை காரணமாயிருப்பதையும் கட்டுரையாளர் விளக்குகிறார்.

ஒப்பாரியில் காணப்படும் பாட்டுகளின் சமூக நிலைபற்றி ஒன்பது சமூகவியல் முடிவுகளை ஆசிரியர் சான்றுகளோடு நிறுவியுள்ளார், இவை மாண்டங்பாம் முதலிய சமூக—மானிடவியல் ஆய்வாளர்களின் முடிவுகளை அரண் செய்வதாகவே உள்ளது.

மனிதர்களின் வாழ்க்கையில் முடிவு மரணம்.

ஒவ்வொரு மனிதனுக்கும் இயற்கையாக நிகழும்முடிவுதான் சாவு. நரை விழுந்து மூப்படைந்து வயோதிகப் பருவத்தில்தான் மரணம் ஏற்படும் என்பதில்லை. கள்ளம் கபடறியாத குழந்தைப் பருவம் முதல் வயோதிகப்பருவம் முடிய மரணம் ஏற்படுவதுண்டு.

குழந்தை, தாய் தகப்பன், உறவினர், மகன், மகள் கணவன் என்ற உறவுகளில் ஏற்படும் இழப்புகள் பெண் மனதில் ஆறாத துன்பத்தைக் கொடுக்கக் கூடியவை.

நாட்டுப்பாடலில் குழந்தைப் பருவத்தில் தாயால் பாடப்படுவது தாலாட்டு. தாயின் கண்டத்திலிருந்து எழுப்பும் இனிய ராகமாக எழும்பும் தாலாட்டின் இசை மயக்கத்தில் குழந்தை தூங்குகிறது. தன்னுடைய குழந்தையின் வளமான எதிர் காலத்தைக் கற்பனையில் காண்கிறாள் தாய். வளர்ந்து பெரியவனாகும் மகன் தன்னுடைய முன்னோரை விடவும் சீரும் சிறப்புமாக வாழ்வான் என்று மகளின் எதிர்காலம் எவ்வாறு அமைய வேண்டும் என்று தாய் விரும்புகிறாளோ அவ்வெண்ணத்தை அடிப்படையாகக் கொண்டது தாலாட்டு. தாயின் அன்பையும், சேயைச் சுற்றி எழும் கற்பனையையும் அடிப்படையாகக் கொண்டது தாலாட்டு.[1]

ஒப்பாரிப் பாடல்கள் வாழ்க்கையை வாழ்ந்து முடிந்து கடமைகளைச் செய்தவரைப் பற்றிப் பாடப்படுவது. ஒப்பாரி பழமையையும் இறந்தவரின் குடும்பத்தாரின் வருங்காலக் கவலைகளையும் உள்ளடக்கமாகக் கொண்டுள்ளது. கடந்த காலம் பற்றிய நினைவுகளையும் வருங்காலம் பற்றி மனைவி, மகள் முதலிய உறவினரது எண்ணங்களையும் ஒப்பாரி வெளியிடுகிறது.

இறந்தவர் கடந்த காலத்தில் ஒரு சாதாரண உத்தியோகத்தில் இருந்தாலும் கூட கணவன் பெரிய பதவியில் இருந்ததாகச்

கூறுவது மரபு. அவளுடைய மனதில் கணவனின் உத்தியோகம் மிகவும் உயர்ந்ததாக எண்ணப்படுகிறது. கிராம உத்தியோகஸ்தரான கணக்கப்பிள்ளை வேலையைக் கூட கலெக்டர் வேலை போன்று அவள் எண்ணுகிருள். அவருடைய உத்தியோக கால கெடுபிடிகளையும் சமூக அந்தஸ்தையும் பற்றிப் பெருமையாகப் புகழ்ந்து அவர் இறந்துபோனதால் தன்னுடைய கௌரவமான வாழ்க்கையை இழந்ததாக எண்ணுகிருள்.

தூணுல சாஞ்சு—நீங்க
துரைகளோட வாதாடி
தூணும் துணுக்கிட—உங்க
துரை அடிமை வாக்குரையான்
விரலும் கணக் கெழுதும்—உங்க
வெள்ளை மொழி தூதாகும்
கையும் கணக்கெழுதும்— உங்க
கருத்த மொழி தூதாகும்
சட்டிமேல் சட்டி வச்சு—நான்
சரியாய்ப் பிழைச்சு வந்தேன்
சட்டி கவுந்ததென்ன—எனக்கு
சனியன் தொயந்ததென்ன

(த நா. பா. 565)

நம் சமூகத்தில் ஒரு பெண் இளமைப் பருவத்தில்ருந்து ஒருவரைச் சார்ந்தே வாழ்கிருள். குழந்தைப் பருவத்தில் குடும்பத்தில் தந்தையைச் சார்ந்தும், இளமைப் பருவத்தில் திருமணத்திற்குப் பின்பு கணவனைச் சார்ந்தும், கணவனுல் சம்பாதிக்க இயலாத தள்ளாமைக் காலத்திலோ, அல்லது அவன் இறந்த பின்போ தன் மகனைச் சார்ந்தும் இருக்க வேண்டிய ஒரு நிர்ப்பந்தம் நம் சமூக அமைப்பில் இருந்து வருகிறது.[2] எக்காலத்திலும் அவள் சுதந்திரமாக இருக்க வாய்ப்பு இருந்ததில்லை.

ஒப்பாரிப்பாடல் முற்காலத்திலிருந்தே இருந்து வருகிறது. தற்காலத்தில் பெண்களில் கல்விபெற்றவர்களின் எண்ணிக்கை நாளடைவில் வளர்ந்து வந்திருந்தாலும், மிகவும் குறைந்த வேகத்திலேயே அதிகரித்துள்ளது. அடிப்படையில் பெண்களின் அந்தஸ்து சமூகத்தில் இன்னும் உயரவில்லை. தற்காலத்திலேயே இவ்வாறென்ருல் சில நூற்ருண்டுகட்கு முன்னரும் அதன் பின்னரும் பெண்களின் சமூக நிலைமை அவர்களின் வாழ்க்கையில் பாதிப்புகளை ஏற்படுத்துவதாகவே அமைந்தது.

''கணவனையிழந்தார்க்குக் காட்டுவதில்'' என்று சிலப்பதிகாரத்தில் இளங்கோவடிகள் கூறியுள்ளது இன்று ஏறக்குறைய உண்மையாகவே உள்ளது.[3] ஒப்பாரிகள் சிலவற்றிலிருந்து பெண்களின் சமூகநிலையைக் கண்டறிவதே இக் கட்டுரையின் நோக்கம்.

மரணம் இயற்கையில் ஏற்படுவதும் உண்டு விபத்துக்களால் திடீர் மரணம் எதிர்பாராத வகையில் ஏற்படுவதும் உண்டு. பாசப்பிணைப்பினுல் கட்டுண்ட குடும்பத்தில் தலைவன் இறந்து போனுலும், அப்பிரிவு அக்குடும்பத்திலுள்ள ஒவ்வொருவரையும் பாதிக்கும் சம்பாதிக்கும் குடும்பத் தலைவன் இறந்து போகிருன். கணவன் இறந்து போனுல் தன்னுடைய ஒரே பாதுகாவலனை இழந்த மனைவி அரற்றுவது பரிதாபத்திற்குரியது. கணவனின் மரணத்தினுல் ஏற்படும் துயரத்தை மனைவி தாங்கிக் கொள்கிருள். அத்துடன் நில்லாமல் கணவனின் மரணம், மனைவியின் மாங்கலிய பலம், மாங்லிய பாக்கியம் இல்லாததால் தான் ஏற்பட்டது என்று உறவினர்களும், ஊராரும் கூறும் பழிச்சொல்லையும் தாங்கிக் கொள்ள வேண்டிய பரிதாப நிலையையும் அடைகிருள்.[4]

புறநானூற்றுப்பாடலில் கணவனையிழந்த கைம்பெண்ணின் விதவைக் கோலமும், அவள் விரதங்களை மேற்கொண்டு வாழும் வாழ்க்கையும் சித்திரிக்கப்பட்டுள்ளதைக் காணலாம். சளகு போன்ற சிறிய இடத்தைச் சாணத்தினுல் மெழுகி வேளைக் கிரை போன்ற உணவுகளையே உண்டு, தரையில் உறங்கிக் கைம்மை நோன்பை நோற்ருள் என்பதைக் கூறுகிறது. பெருங்கோப்பெண்டு பற்றிய புறநானூற்றுச் செய்யுள் கைம்மை நோன்பின் கொடுமையை ஆற்றமாட்டாமல் தன் கணவனேடு தீப்புக விரும்புகிருள் என்பதையும் கூறுகிறது. இது அரசர் குல மரபு.[5]

சங்க காலக் கருத்தை ஒட்டிய கருத்துடைய ஒப்பாரிப்பாடல் ஒன்று உள்ளது. கணவன் இறந்த பின்னர் கைம்மைத் துன்பத்தை எண்ணி அரற்றும் பெண்களின் சோகக்குரல் ஒப்பாரியாகக் கேட்கப்படுகிறது.

பட்டு கழட்டி வைச்சேன்
பாதம் வரை வெள்ளை யிட்டேன்
சிகப்பு கழட்டி வச்சேன்—என்
தேகமெல்லாம் வெள்ளை யிட்டேன்

தாலியிருக்குத் தாலி—நான்
தங்கத்தால் பொன் தாலி
தாலி கழற்றி விட—எந்தன்
தருமருக்கே சம்மதமோ

மல்லிகைப் பூ—மெத்தையிலே
மாதம் கூடத் தூங்கலியே
மாமியாள் கொடுமையினால்
மஞ்சளில்லாப் பாவியானேன்

(த. நா. பா. 542)

தனக்கு நேர்ந்த இழப்பு ஒருபுறம்; சமூகம் விதவைகளை அமங்கலமாகக் கருதுவது மறுபுறம். விதவை எதிரே வந்தால் சகுனத்தடை, முகத்தில் விழித்தால் ஆகாது, அவள் தொட்ட காரியம் துலங்காது, சுப காரியங்களிலும், சுப நிகழ்ச்சிகளிலும் அவள் பங்கெடுக்கக்கூடாது. தன் குழந்தைகளுக்கு நடக்கும் சுப காரியங்களில் கூடப் பங்கெடுக்கக் கூடாது என்பன போன்ற சமூகக் கொடுமைகளுக்கும் ஆளாகிறார்கள்.

இதனை

அல்லியும் தாமரையும்
அடரிப் படர்ந்தாலும்
அல்லி பார்க்க வந்தவிக—என்னை
அச நாட்டார் என்பாக

முல்லையும் தாமரையும்
முறுக்கிப் படர்ந்தாலும்
முல்லை பார்க்க வந்தவுக—என்னை
மூதேவி என்பாக

(த. நா. பா. 558)

எனச் சித்தரிக்கிறது. மேலும்,

சீமை யழியுதுண்ணு—நான்
சிந்தையிலும் எண்ணலியே
சீமை யழியலையே—என்
சிறப்பழிந்த மாயமென்ன

மருத அழியுதுண்ணு—நான்
மனசிலயும் எண்ணலியே
மதுரை அழியலையே- என்
மதிப்பழிஞ்ச மாயமென்ன

(த. நா. பா. 541)

எனவும் சித்திரிக்கிறது.

இயற்கை மரணம் எய்திய கணவனுக்குப் பின்பு மனைவிக்குச் சாகும்வரை கொடுமை தீராது என்பதை,

பொண்ணடிமைத் தீர்மானம்
போய் முடிஞ்சாத் தீருமண்ணே
சண்டாளி தீர்மானம்
தலை முடிஞ்சாத் தீருமண்ணே

(த. நா. பா. 553)

குழந்தையிருந்தால் தன்னுடைய விதவை நிலையிலும் தாய் ஆறுதல் அடைவாள். குழந்தையும் இல்லையெனில் அவளுடைய துன்பத்தை அளவிட முடியுமா? குழந்தைக்குத்தகப்பனது சொத்தில் பங்கு உண்டு. பங்காளிகளோ சொந்தக்காரர்களோ எளிதில் அபகரிக்க முடியாது. தனியே இருக்கும் விதவையை மைத்துனன்மார் விரட்டி விட்டால் என்ன செய்ய முடியும்? கோர்ட்டில் நியாயம் கிடைக்குமா? குழந்தையிருந்தால் நியாயம் கிடைக்க வழியுண்டு. ஆனால் குழந்தையில்லையே! நியாயமும் கிடைக்கவில்லை. பெண்களுக்குச் சொத்துரிமை இல்லாதிருக்கும் நிலையில் பெண்களுக்கு நேரும் துயர நிலையைக் கீழ்வரும் பாட்டு நம் கண்முன் நிறுத்துகிறது.

மஞ்சணத் தொந்தியிலே
மைந்தன் பிறந்தாக்க
மைந்தனுக்குப் பங்குண்டும்
மதுரைக் கோட்டிலேயும்
நியாயமுண்டும்

மஞ்சணத் தொந்தியிலே
மைந்தன் பிறக்கலியே
மைந்தனுக்குப் பங்குமில்லே.
மதுரைக்கோட்டுலேயும் ஞாயமில்லே.

குங்குமத் தொந்தியிலே
குழந்தை பிறந்தாக்க
குழந்தைக்குப் பங்கு முண்டும்—மதுரைக்
கோட்டுலேயும் நியாயமுண்டும்.

குங்குமத் தொந்தியிலே
குழந்தை பிறக்கலியே
குழந்தைக்குப் பங்குமில்லே—மதுரைக்
கோட்டுலேயும் நியாயமில்லே.

(த. நா. பா. 559)

இது தவிர, பிறந்த வீட்டிலும் பிள்ளை யில்லாதவளுக்கு வரவேற்பில்லே. மதினிமார் வரவேற்கமாட்டார்கள். சகோதரன் பாசமாக இருந்து வந்தாலும், ஆண் மகன் வீட்டில் இருக்கும் நேரம் குறைவு தானே![7]

தன் அண்ணனை வீமனென்றும் கர்ணனென்றும் புகழ்கிருள். ஆனுல் அதே சமயம் கொடுமை செய்யும் மதினியையும் நன்ருக வாய்க்கவில்லே என்று கூறுகிருள்.

கள்ளி மேல் கந்தாளை
கருணனெல்லாம் எம் பிறப்பு
கருணனுக்கு வந்தவளோ
என்னை மதிக்காளில்லே,

வேலி மேல் கத்தாளை
வீமனெல்லாம் எம் பிறப்பு
வீமனுக்கு வந்தவளோ—என்னை
விலேயா மதிக்காளில்லே.

(த. நா. பா. 545)

தாய் இறந்தவுடன் பாடும் ஒப்பாரியில் உடன் பிறந்தவர்களின் மனேவிமார்களின் ஆதிக்கம் தாய் வீட்டில் எவ்வாறு நடைபெறுகிறது என்பதை,

என்னப் பெத்த அம்மா
நீங்க இல்லா வாசலிலே
சாத்திக் கதவடைப்பாள்
தாழ்பாளை உள்ளியிடுவாள்
இருத்திக் கதவடைப்பாள்
ஈரமண்ணைப் போட்டடைப்பாள்
கொப்பறையில் பால் காயும்
கோருயக்குப் பயமானேம்

அண்டாவில் பால் காயும்
அள்ளிப் பருகப் பயமானேம்
கள்ளியிலே வெள்ளருகு
கர்ணரெல்லாம் எம் பிறவி
காணருக்கு வாச்ச அலங்காரி
—எங்களை
கள்ளி என்று ஏசுவாளே

தண்ணியிலே வெள்ளருகு
தருமரெல்லாம் எம் பிறவி
தருமருக்கு வாச்ச அலங்காரி
—எங்களை
தள்ளிப்போ என்றுரைப்பாள்

ஆலம் விழுதானேம்—நீங்க
இல்லா வாசலிலே—நாங்கள்
ஆகாத பிள்ளையானேம்

பொங்கும் வாசலிலே—நாங்கள்
பொல்லாத பிள்ளையானேம்[8]

இவள் வருகிருள் என்று தெரிந்து வருமுன்பே கதவடைத்துத் தாள் போடுவதுடன் ஈரமண்ணையும் கதவில் பூசுவாள். நல்ல தங்காள் கதைப் பாடலிலும் அண்ணி மூளி அலங்காரி நல்ல தங்காள் தங்கள் வீட்டிற்கு வருமுன்பாகவே கதவைப்பூட்டி ஈரமண்ணைக் கதவில் பூசி அடைத்தாள் என்றும் கூறுகிறது.[9]

சகோதரர்களுடன் பெண்ணும் தன் சிறுவயதில் வீட்டு வேலேகளுடன் விவசாய வேலேகளேயும் செய்கிருள் நன்செய் புன்செய் ஆகிய இரு விளை நிலங்களுமல்லாமல் தோட்ட வேலேயும் செய்கிருள். காய்கறி போன்ற விளைபொருட்களை அண்ணுமாரோடு சேர்ந்து பாடுபட்டு விளைவிக்கிருர்கள். தங்கை திருமணமாகிச் சென்ற பின்பு சொத்துக்களிலோ அவ்விளைபொருட்களிலோ அவளுக்கு உரிமை கிடையாது. கணவனை இழந்து விட்டால் ஒரு உரிமையுடன், தான் பிறந்த வீட்டில் அவ்விளைபொருட்களேயோ

சொத்துக்களையோ ஆண்டனுபவிக்க முடியாது. ஆண் மகனே அனைவற்றையும் ஆண்டனுபவிக்கும் உரிமையைப் பெறுகிறான். அவன் மனைவியும் அவனோடு சேர்ந்து சொத்தின் வருமானத்தை அனுபவிக்கிறாள்.

கத்தூரியும் பாவையும்
கலந்தேன் ஒரு பாத்தி
கருணன உடன்பிறந்து—நான்
கசந்தேன் பிறந்தெடத்தே

வெள்ளறியும் பாவையும்
வெதச்சேன் ஒரு பாத்தி
வீமன் உடன்பிறந்து—நான்
வெறுத்தேன் பிறந்தேடத்தே (555)

கம்பு விளைஞ்சிருக்கும்
காலிபுமே சாஞ்சிருக்கும்—நான்
கருக்குருபி வேஷம் கொண்டு
கலியுமே அண்டினு

கருணையண்ணன் பெண்டாட்டி
காதத்துக் கொரு கல்லெடுத்து
கடக்க விரட்டி விட்டாள்
(த. நா. பா. 589)

சொத்து சுகங்கள் உள்ள குடும்பத்தில் சிறு குழந்தையான மைந்தன் இருக்கையில் கணவன் இறந்தால் சொத்துக்களை நிர்வகிக்கும் பொறுப்பில் கணவனின் சகோதரர்கள் இருப்பார்கள். அம்மைத்துனர்கள் நம்புதற்குரியராக இல்லாமல் இருந்து விட்டால், தன்னையும் தன் குழந்தையையும் நிராதரவாக விட்டு மறைந்த கணவனையும் நினைத்து அரற்றுவாள். தன் மைந்தனுக்குச் சேர வேண்டிய சொத்துக்களை ஏமாற்றி அபகரிக்கும் மைத்துனர்மார்களின் இரக்கமின்மையைக் குறித்தும் பாடுவாள். சிறிய மகன் துண்டு நிலத்தைப் பாதுகாக்கும் வலிமையற்றவனாக இருப்பதால் அந்நிலத்தைப் பறித்துக் கொள்ள பெருநிலக் கிழார்கள் எத்தனையோ சூழ்ச்சிகள் செய்வார்கள். களத்தில் போர் போட்டிருக்கும்பொழுது மாட்டை விரட்டியடிப்பார்கள். விளைந்த வயலில் எருதை விரட்டியடிப்பார்கள். எதிர்த்தால் வழக்குப் போடுவார்கள். இத்துன்பங்கள் தாங்காமல் நிலத்தைத் தங்கட்கே விற்றுவிடச் செய்ய அவர்கள் கையாளும் முறைகள் இவை. சிறுவனுடைய உரிமைகளைப் பாதுகாக்கும் கடமையை, பொறுப்பை தன்மீது சுமத்திவிட்டுக் கணவர் மாண்டு போனாரே என்று கணவரை நினைத்துப் புலம்புவாள்.[10] இதை,

மத்தங்கா புல்லு வெட்டி
மலையோரம் போர் போட
மலையோரம் போரிலே தான்
மாடு வந்து மேயுதிண்ணு

மாதுளம் பூச் சாட்டை கொண்டு
மாட்டை விரட்டி விட
மைந்தன் சிறு வயசு—நான்
மன சொடிஞ்சு போனேனே

இஞ்சிக்காக புல்லு வெட்டி
எடைபோரம் போர்போட
எடைபோரம் போரிலே தான்
எருது வந்து மேயுதிண்ணு

எலுமிச்சங்கா சாட்டை கொண்டு
எருதை விரட்டி விட
என் செல்வன் சிறுவயசு—நா
செருவடைஞ்சு போறேனே
(த நா. பா. பக். 579)

குழந்தைக்கு நோய் கண்டது. வைத்தியன் முடி தாக்கி விட்டது[11] என்கிறான். நெல்லை மாவட்டத்தில் சீர்தட்டி விட்டது[12] என்பார்கள். இந்நோய் காண்பதற்கு விநோதமான காரணத்தையும் கூறுவார்கள். கணவனோடு உடலுறவு கொண்ட மனைவி குழந்தைக்கும் பால் கொடுத்தால் இந்நோய் உண்டாகிறதாம். வீட்டுக்கு விலக்கான பெண், குழந்தையைத் தொட்டு விட்டால் இந்நோய் உண்டாகிவிடுகிறதாம். இவ்வாறு பல மூட நம்பிக்கையால் விஞ்ஞான ரீதியாக நோய்க்கு மருந்து கொடுக்காமல் குழந்தை இறந்துவிடும். நாட்டு வைத்தியரிடம் செல்லும் கிராமத்திலுள்ள தாய்மார்கள் மருந்து வகை பலனளிக்காமல், அல்லது வாங்க முடியாமலே குழந்தையைப் பறிகொடுத்துவிட்டு, தன்னுடைய மடமையை எண்ணிப் புலம்புவதும் உண்டு.

மச்சு வீடு கச்சேரி
மாய வர்ண மாளிகை
மைந்தன் கலங்கினதும்
மாயமுடி தாக்கினதும்

மன்னவரும் தேவதையும்
மருந்து வகை சிக்காமல்
மைந்தனைப் பறி கொடுத்தோமே
மாபாவி ஆனேமய்யா

(த. நா. பா. 593)

இங்கு நோய்க்கு மருந்து கொடுக்க வேண்டும் என்ற நினைப்பில்லாமல் நோய்க்கு முடி தட்டினதும், தேவதை குற்றமும் காரணம் என்று கூறுகிறாள். இன்னும் இவ்வாறு நம்புகிற தாய்மார்கள் இருக்கிறார்கள்.

போக்குவரத்து வசதிகள் மிகுதியானது தற்காலம். மோட்டார் செல்லாத கிராமமே அனேகமாக இல்லை எனலாம். கார் விபத்தில் இறந்துபோன கணவனை மருத்துவ மனையில் சேர்த்துப் பிரேத பரிசோதனைக்காக வைத்திருக்கிறார்கள். போலீஸ் சடங்குகள் முடிந்து சடலத்தை அவள் இன்னும் பார்க்கவில்லை. தன்னை உள்ளே விடக் கூறுகிறாள். போலீஸ் அதிகாரியிடம் கூறுவது போன்றும் அமைந்துள்ளது. ஆங்கில வார்த்தைகளை அவளறிந்த பாணியில் கூறிப் பாடுகிறாள்.

சாஞ்ச பணிகளாம்
சத்தமிடும் மோட்டாராம்
சத்தமிடும் மோட்டாரில்
சாஞ்சிருந்த மன்னரெங்கே

சாஞ்சிருந்த மன்னருக்கு
தயவு சொன்ன டைவரெங்கே
சத்தமும் ஆன தென்ன
உயிர் கொலையும் ஆனதென்ன

ஜனத்தை விலக்கி விடு
தாசில்தார் என் தகப்பா
வெள்ளி மணிகளெங்கே
விசயனூர் காரு அங்கே

விசயனூர் காருக்குள்ளே
வீத்திருந்த மன்னரெங்கே

வீத்திருந்த மன்னருக்கு
வித்தை சொன்ன டைவரெங்கே

கூட்டத்தை விலக்கிவிடு
கோட்டாரே என் தகப்பா
கோடி கொண்டு வந்த—எந்தன்
கொண்ட வர நான் பார்க்க

(த. நா. பா. 549)

விபத்துக்கள் தவிர சாதிக்கலகங்களும் திடீர் மரணங்களுக்குக் காரணமாயிருந்துள்ளன. சாதிக்கலகங்கள் பல தமிழ் நாட்டில் ஏறக்குறைய 150 ஆண்டுகளிலிருந்து 75 ஆண்டுகளுக்கு முன்னர் வரை நடந்துள்ளன. கலகங்களில் பொதுவாக ஆடவர்தான் ஈடுபடுவர். ஆனல் இறந்து போனவர்களில், பெண்களது, சகோதரர், கணவன், குழந்தைகள் இருக்கலாம். கலகத்தில் ஏற்படும் சாவு துயரம் தனிவுணர்வாக இல்லாமல் சமூக உணர்வாக வெளிப்படுகிறது. காதலன் இறந்தபோது அரற்றுகிற காதலி, தான் அவனுக்கு அளித்த லேஞ்சி ரத்தத்தால் நனைந்ததே என்று அரற்றுகிறாள். லேஞ்சி தான் அவனுக்கும் அவளுக்கும் ஏற்பட்ட உறவின் அறிகுறி. அது இரத்தத்தால் நனைந்தது என்று அவனுடைய மரணத்தைக் குறிப்பிடுகிறாள்.

தன்னைப் பாதித்தால் மட்டும்தான் பெண் மனம் புண்ணுகும் என்பதில்லை. யார் யாரோ இறந்தாலும் அனுதாபப்படுகிறாள். பளியப்பாட்டம் என்று பளியர்களிடம் பங்கு வாங்கப்போய், கலகம் நடந்து இறந்து போனவர்களைப்பற்றி அனுதாபம் காட்டும் வகையில் ஒரு பாட்டு தமிழர் நாட்டுப் பாடலில் இருக்கிறது.[13]

பாண்டிய மன்னன் அய்யாத்துரை
பங்கு வாங்கப் போக போயி
பழி விழுந்து மாண்டாரய்யா

ஜாதியில் மறக்குலமாம்
சார்ந்த குண ஐயாத்துரை
பண்டாரச் செட்டிபாலே
பட்டு மடிந்தாரய்யா
பழனிபாண்டித் தேவர் மகன்
பாண்டிய மன்னன் ஐயாத்துரை

பங்கு வாங்கப் போகப் போயி
பழி விழுந்து மாண்டாரய்யா
(தா. நா. பா. 413)

தன் உறவுக்குள்ளேயே பெண்ணைக் கொடுத்தால்தான் மகள் சந்தோஷமாக வாழ்க்கை நடத்துவாள், உறவும் விட்டுப் போகாது என்று எண்ணி, தாய் மாமன், அத்தை மகன், மாமன் மகன் முதலியோருக்குப் பெண்ணைக் கொடுப்பார்கள். இத் திருமணத்திலும் அவர்கள் எதிர்பார்த்ததற்கு மாறான விளைவும் ஏற்படுவதுண்டு. கணவன் மனைவி அன்புள்ளவர்களாக இருக்கமாட்டார்கள். பெண்ணைக் கொடுமைப் படுத்திக் கண்ணீர் விடச் செய்வார்கள். இவ்வாறு தாய் மாமனுக்கு மண முடித்து வைக்கப்பட்ட பெண் ஒருத்தி தன் தாய் இறந்த துக்கத்துடன் தன் துக்கத்தையும் கூறி அழுகிறாள். தனது தாய் மாமன் வீடு தனக்கு ஆடு மாடு போன்ற விலங்குகளைப் போட்டடைக்கும் பட்டியாகத் தோற்றம் அளிக்கிறதே யல்லாமல் மனிதர்கள் வாழக்கூடிய இடமாகத் தெரியவில்லை. தனது மண வாழ்க்கை, உறவில் தன்னைக் கொடுத்ததால் பாழாகிப் போய்விட்டதே என்று தாய் மீது பழிபோடுகிறாள்.

மாதா பொறந்த இடம்
மல்லியப்பூக் கச்சேரி
மாலைப் பொருத்தமில்லை—எனக்கு
மாமன் வீடு சொந்தமில்லை

தாயார் பொறந்த இடம்
தாளாம்பூக் கச்சேரி
தாலி பொருத்தமில்லே—எனக்கு
தாய் மாமன் சொந்தமில்லே

மாடடைக்கும் பட்டியிலே—நீ பெத்த
மங்கையாள போட்டடைச்சு
மாடுபடும் துன்பமெல்லாம்—இந்த
மங்கைப்பட்டு நிக்கிறனே

ஆடடைக்கும் பட்டியிலே—நீ பெத்த
அல்லியாளப் போட்டடைச்சு
ஆடுபடும் துன்பமெல்லாம்—இந்த
அல்லிப்பட்டு நிக்கறனே
(த. நா. பா. 699)

பொருந்தா மணம் பெண்களுக்கே பெருந்தீமை விளைவிக்கிறது. வாழ்க்கையில் வசதி படைத்தவர்களும், செல்வந்தர்களும் தங்கள் மகளைச் சீரும் சிறப்பும் செய்து தகுந்த வாலிபனுக்கு மணமுடித்து வைத்து விடுகிறார்கள். அன்றாடம் வாழ்க்கையின் தேவைகளுக்கே ஈடுகொடுத்து வாழ முடியாதவர் வீட்டில் பெண் பிறந்து விட்டால் திருமணம் ஒரு சோதனை தரும் வேதனை நிகழ்ச்சியாகி விடுகிறது. சமூகத்தின் கொடுமைகளுள் ஒன்றான இத்தகைய பொருத்தமில்லாத திருமணங்கள் இளம் பெண்களின் இளமை உள்ளத்தின் எதிர்பார்ப்புகளை ஏமாற்றமடையச் செய்வதுடன் அவர்களின் வாழ்க்கையையும் பயனற்றதாகச் செய்து விடுகிறது.

வயோதிகரைத் திருமணம் செய்து கொள்ளும் இளம் பெண் விரைவிலேயே விதவையாகிறாள். வியாதியஸ்தனாக இருப்பது தெரிந்தாலும் தன் மகளுக்கு வேறு வரன் பார்க்க முடியாத காரணத்தினால் அவனுக்கே திருமணம் செய்து கொடுத்து விதவையாக்குகிறார்கள். இத்தகைய திருமணங்களுக்குப் பெண்கள் எதிர்ப்புத் தெரிவித்தாலும் அது மதிப்பில்லாததாகி விடுகிறது. அவ்வாறு நோயாளிக்கு மனைவியாகி விதவையான பெண், தன் தகப்பன் பணத்துக்கு ஆசைப் பட்டுத் தன் வாழ்வை வீணடித்ததை,

மதியம் கிளம்பி வரும்
மாய இருட்டு கட்டி வரும்
மறிநாட்டு ராஜ மன்னன்
மாலை கொண்டு வந்ததும்

வண்டறிச்ச மாலை என்று
வாங்கி எறிபாம—நீங்க வளத்த
மயிலாருக்குச் சூடினதால்
மாலை படும் தொந்திரவு
இன்னிக்கு பாவிபட நேர்ந்ததுவே

பொழுது கௌப்பி வரும்
பொன்னிருட்டுக் கட்டி வரும்

பொற நாட்டு ராசமன்னர்
பூக் கொண்டு வந்ததும்.. நீங்க
புழுவறிச்ச பூவுன்னு
புடுங்கி எறிபாம

நீங்க தேடிய பெண்ணுருக்குச்
சூடியதால்
பூப்படும் தொந்திரவு—உங்களுட
பொன்னுள் பட நேர்ந்ததுவே (584)

அத்தான் கரையோரம்
ஆனே வந்து மண்டியிடும்

ஆனைக்கும் சங்கிலிச்கும்
அளவு பாத்துப் பூட்டியிருந்தால்
—எனக்கு
அலுப்பு வந்து நேராது

கல் பொறுச்கும் சீமையிலே—என்னே
கட்டிக கொடுத்தாங்க
கல்லே பொறுக்குவேனே எங்கப்பன்
வீட்டுக்
காதவழி சேருவேனே

முள்ளெடுக்கும் சீமையிலே—என்னே
முடிஞ்சிக் கொடுத்தாங்க
முள்ளேப் பெருக்குவேனே எங்கப்பன்
வீட்டு
முல்லே வனம் சேருவேனே
(தா. நா. பா. 659)

ஒரு பெண்ணின் தாய் தந்தையர் பொருத்தம் இல்லாத இடத்தில் மகளேத் திருமணம் செய்து, கொடுத்துள்ளதால் அவள் புருஷன் வீட்டில் பல அவிவாதங்களே ஏற்றுக் கொண்டு இருக்க நேரிடுகிறது. அவளேத் தகுந்த இடத்தில் திருமணம் செய்து கொடுத்திருந்தால் அவள் வாழ்வில் நிம்மதியும் மகிழ்ச்சியும் அடைவாள் அல்லவா?[14] தந்தையின் மரணத்தின்போது அக்குறையை வெளிப்படுத்துகிருள்.

சீனு மரிக் கொழந்து
சீட்டெழுதும் பின்னுங்கு
சீரா கொடுத்திருந்தால்
சின்னச் சொல்லும் ஏன் வருது

பேரா மரிக் கொழுந்து
பேரெழுதும் பின்னுங்கு
நேரா கொடுத்திருந்தால்
பெரிய சொல்லு ஏன் வருது

குளத்தாங்கரை யோரம்
குதிரை வந்து மண்டியிடும்
குலம் பாத்துக் கோத்திருந்தால்—எனக்கு
குறைவு வந்து நேராது
(த. நா. பா. 659)

பெண்ணுகப் பிறந்தால் தானே இவ்விதம் துன்பங்கள் நேருகின்றன. பெண்ணுகப் பிறக்காமல் ஆணுகப் பிறந்திருந்தால் தந்தைக்குப் பின் வீட்டிற்கு உரிமை உள்ளவளாக இருக்கலாம். எந்தவிதச் சுதந்திரமும் உண்டு. கோயில் சிலேயாகப் பிறந்திருந்தால் கூட மாதம் ஒரு பூசை நடக்கும். பெண்ணுய்ப் பிறந்ததுதான் குறை என்ற விரக்தியுடன் எண்ணங்களே வெளிப்படுத்துவதாக[15]

ஆதண்டங்காய் காய்க்கும்
அலரி பூ பிஞ்சிறக்கும்
ஆணுய்ப் பிறந்திருந்தால்
அப்பன் வீட்டு அரண்மனேயில்
அம்பெடுப்பேன் வில்லெடுப்பேன்

மாரியம்மன் கோயிலண்டை
மண்ணுய்ப் பிறந்திருந்தால்—எனச்கு
மாசம் ஒரு பூசை வரும்

பெண்ணுய்ப் பிறந்த குறை
புலம்பிக் கிடைக்கலாச்சு
(த. நா. பா 667)

ஒப்பாரிப் பாடல்களிலிருந்து பெண்களின் சமுகநிலேபற்றிப் பின் வருவனவற்றை அறிகிறேும்.

1. ஒப்பாரிப்பாடல்கள் சுய சரிதத் தன்மை வாய்ந்தவை. இறந்தவரைப் பற்றியும், பாடுபவரைப்பற்றியும் பல செய்திகளே அவை தெரிவிக்கின்றன.

2. இறந்தவரது பெருமை, அவரது தகுதி இவற்றை உயர்வு நவிற்சியாகக் கூறுகின்றன.

3. கணவன் இறந்தால், மைத்துனர்களால் ஏற்படும் தொல்லேகளுக்கு மனேவி அஞ்சுகிருள். பிறந்த வீட்டில் தாய் இறந்த பின் உரிமை கிடையாது, என்பதை மகள் கூற்ருகக் கூறுகிருள்.

4. குழந்தையில்லாவிட்டால் தனது அநாதரவை எண்ணி வருந்துகிருள்.

5 குழந்தையிருந்தால், அறியாப்பருவத்தில் அவனுக்கு ஆதரவாக ஆண் உறவினர் இல்லையே என்று வருந்துகிருள்.

6. கைம்மை பற்றி, சமூகத்தின் மதிப்புகளை எண்ணி இரங்குகிருள்.

7. மலட்டுத்தன்மை பற்றிய நம்பிக்கைகளை விதவைகளின் கூற்ருக ஒப்பாரிகள் கூறுகின்றன.

8. விபத்து, கலகம் இவற்றைப் பற்றி நினைக்கும் பொழுது தன்னுணர்வு, சமூக உணர்வாக மாற்றம் பெறுகிறது.

9. உறவுக்குள் திருமணம் செய்து கொடுத்து மகிழ்ச்சியாக வாழ்வாள் என்று பெற்ருேர் நம்பிக்கொடுக்க, கணவன் மனைவி உறவு பொருந்தாதபோது மகள் வருந்திப் பாடும் பாடல்கள் அவர்களது குடும்ப உறவு பற்றிய செய்திகளை அளிக்கின்றன.

ஒப்பாரிப் பாடல்கள் குறைந்த பட்சம் ஒரு தலை முறைக்கு முந்தியவை. அக்காலத்தில் பெண்கள் குடும்பத்தில் வாழும் நிலைமையையும் சமூகத்தில் அவர்களுக்கிருக்கும் அந்தஸ்தையும் பல பாடல்கள் வெளிப்படுத்துகின்றன. அறியாமை, குடும்ப அடிமைத்தனம் சமுதாய வாழ்க்கையில் பங்கு பெருமை, பொருளாதார சுதந்திரம், ஆகியன மறுக்கப்பட்டு. வாழ்ந்து வந்த பெண்கள் இன்று முன்னேற வாய்ப்புகள் ஏற்பட்டுள்ளன. முற்போக்கான பல சட்டங்கள் இயற்றப்பட்டுள்ளன. கல்வி வசதிகள், வேலை வாய்ப்புகள் ஓரளவு கிடைத்துள்ளன. ஓட்டுரிமை 21 வயதான பெண்களுக்கும் அளிக்கப்பட்டு உள்ளது. தங்கள் இன நிறுவனங்களில் சேர்ந்து தங்கள் உரிமைகளுக்காகக் குரல் கொடுக்கும் வாய்ப்புக் கிடைத்துள்ளது. பொருளாதார நிலையில், ஆணுக்கும், பெண்ணுக்கும் சம கூலி என்பது கொள்கையளவில் அரசால் ஒப்புக்கொள்ளப்பட்டுள்ளது.

ஒப்பாரியில் காணப்படும் பெண்களின் சமூக நிலையில் இருந்து பெண்கள் இப்பொழுது படிப்படியாக முன்னேறி வருகிருர்கள்.

## அடிக்குறிப்புகள்

1. நா. வானமாமலை, தமிழர் நாட்டுப் பாடல்கள்—முகவுரை
2. மனுஸ்மிருதி—பெண்கள் கடமை
3. இளங்கோ, சிலப்பதிகாரம்
4. விதவை பற்றிய சமூகக் கருத்துக்கள். சமூக நமபிக்கை
5. புறநானூறு பெருங்கோப் பெண்டு
6. விதவை பற்றிய சமூக நம்பிக்கைகள்
7. மணமான தங்கையர் நிலைமை பற்றி, குடும்பம் சமூகம என்ற பகுதிகளிலும் (தமிழர் நாட்டுப் பாடல்கள்) பாடல்கள உள்ளன. நல்ல தங்காளின் கதை இதற்கு ஏற்ற உதாரணம்.
8. புதியவானம், ஜனவரி 1977
9. நல்ல தங்காள் கதையிலும் இவ்வுணர்ச்சி வெளிபடுகிறது. இப்பாடல் அக்கருத்தை அடியெற்றிப் பாடப்பட்டது.
10. மாரியப்மன் கதை என்ற கதைப்பாடலில் கணவனை யிழந்த மனைவி, உறவினர்கள் கணவனது உரிமையான சீதவதானத்தை இழந்து ஊரைவிட்டு வெளியேறியதைக் கூறுகிறது. பிறகு மழை பெய்து வெள்ளம் வந்ததால் தாயும் மகளும் இறந்து போகிருர்கள். அவர்கள் தங்களுக்குத் துன்பமிழைத்தவர்களைச் சபிக்கிருர்கள். அவர்களும் வெள்ளத்தில் இறந்து போகிருர்கள்.
11. முடி தாக்கிவிட்டது, என்பது நோய் வரக் காரணம் என்று நம்பப்படுகிற ஒரு மூட நம்பிக்கை—சேலம், தர்மபுரி மாவட்டங்களில் வழக்கத்தில் உள்ளது.
12. சீர் தட்டிவிட்டது.—நெல்லை மாவட்டத்திலுள்ள நாட்டார் வழக்கு.
13. இத்துறைப் பாடல்கள் பல உள்ளன. த.நா.பா களில் நான்கு பாடல்கள் உள்ளன. இத்தகைய பாடல்கள் சேகரிக்கப்பட்டால் வரலாற்று நிகழ்ச்சிகள் பற்றி நாட்டார் நோக்கை அறியலாம்.
14. பொருந்தா மணம் மிகவும் சாதாரணமானது. இதனைக் கோணல் முடிச்சு என்று தமிழ் நாவலாசிரியர் ஜானகிராமன் குறிபிடுவார். இக் கருவினைக் கொண்டே சில நவல்கள் எழுதியுள்ளார். நாட்டுப்பாடலில் இச் சமூகப் பழக்கத்தை அதனுல் பாதிக்கப்பட்ட பெண்ணே, வெறுத்துரைப்பாள். இது த. நா பாடலில் சமூகம், குடும்பம், திருமணம் என்ற பகுதிகளில் வரும். ஒப்பாரியில் தனக்கிழைக்கப்பட்ட கொடுமையைத் தாய் தந்தைமார் சாவின்போது நினைவு படுத்திக்கொள்வர்.

# பதிற்றுப்பத்தில் வரும் 'சான்றோர்'

பி. எல். சாமி, பி. எஸ். ஸி.

இனக்குடி மக்களை வென்று படைகளில் சேர்த்துக் கொண்டதற்கும் அவர்களின் பாதுகாவலன் என்று தம்மை அழைத்துக் கொண்டதற்கும், பல இலக்கியச் சான்றுகள் உள்ளன. இவ்வினக்குழு மக்கள் நிலவுடைமைத் தனியுரிமை வலுப்பெறும் பொழுது, மூவேந்தவர்களது நாடுகளின் அருகில் வாழ்ந்த மக்களாக இருத்தல் வேண்டும். பதிற்றுப்பத்து கூறும் சான்றோர் கேரளத்தில் அரசு தோன்று முன் இனக்குடிகளாக வாழ்ந்தவர் ளேயாவர். படைகளில் சேர்த்துக்கொள்ளப்பட்டபொழுது, அவர்களுக்குத் தன் பாதுகாப்பு அளித்ததைக் குறிப்பிட வீரம் நிறைந்த இவர்களுக்கு 'சான்றோர்' என்ற பெயரிட்டு அரசன் அழைத்தான். சான்றோர் என்று அரசன் 'விருது' வழங்குமுன் அவர்களுக்கிருந்த பெயர் யாது? இவ்வினாவிற்கு விடை காண வேண்டும்.

அதே :விருது பாண்டி நாட்டிலும் சோழநாட்டிலும் வாழ்ந்த தென்னையில் இருந்தும், பனையில் இருந்தும், ஈச்சமரத்திலிருந்தும் கள்ளிறக்கு வோருக்கு வழங்கியதா?

ஈழத்திலிருந்து இவர்கள் அனைவரும் வந்தார்கள் என்று கருதஇடமில்லை. சிலர் வந்திருக்கலாம். சிலர் அரசர்களோடு மாறுபாடு கொண்டு ஈழத்திற்குப் போய்த் திரும்பியிருக்கலாம். ஆனால் (large scale imigration) பெரும் அளவில் இடப் பெயர்ச்சி 2000 ஆண்டுகளுக்கு முன்னர் இனக்குடி மக்களுக்குச் சாத்தியமில்லை. நாடார்களது பரம்பரை வரலாறுகளில் கரிகாலன் ஆட்சியில் ஏற்பட்ட அடக்கு முறையினால் பாண்டி நாட்டிற்கும், ஈழத்திற்கும் சென்றனர் என்றும பின்னர் சில நூற்றாண்டுகளுக்குப் பின்னர் நாடு திரும்பினர் என்றும் கூறப்பட்டுள்ளது. இது மிகச்சிலராகவே சாதி வரலாறு கூறுகின்றன.

பிற்காலத்தில் இனக்குழு நிலைமையில் இருந்து விடுபட்டு, கள்ளிறக்கும் தொழில், பயிர்த்தொழில் இவற்றை மேற்கொண்டபோது கள்ளிறக்கும் தொழிலையுடைய பல சாதியார்கள் தற்பாதுகாப்புக்கும் அரசர் கொடுங்கோன்மையையும் வரிச்சுமைகளையும் எதிர்க்கவும். ஒரே சாதியாக பற்பல அரசர்களின் ஆட்சிக் காலங்களில் இணைந்தனர் என்றே தோன்றுகிறது.

இன்றும் தீயர், ஈழவர், நாடார் என்பவர் பல வழக்கங்களில் ஒன்றுபட்டிருப்பினும், அவர்களிடையே மிகப்பொதுவான கொள்வினை கொடுப்பினை இல்லை என்பதும் அவர்களே ஒரே சாதியென்று கருதிக் கொள்வதில்லை என்பதும், ஒரே தொழில் செய்யும பல சாதியினர், பொது இடையூறுகளை எதிர்ப்பதற்காக ஒன்று சேர்ந்தனர் என்றே கருதத் தோன்றுகிறது.

நா. வா.

பதிற்றுப்பத்தில் 'சான்றோர் மெய்ம் மறை' என்று சேரமன்னர் போற்றப்படுகின்றார்கள்.

எழுமுடி கெழீஇய திருஞெம ரகலத்து
நோன்புரித் தடக்கைச் சான்றோர்
மெய்ம்மறை

—பதிற்றுப்பத்து 14 : 11 — 12.

இந்தப் பாட்டில் துறையும் வண்ணமும் தூக்கும் பெயரும் கூறப்பட்ட இடத்தில் பெயராக 'சான்றோர் மெய்ம்மறை' என்ற வழக்கு குறிப்பிடப்பட்டுள்ளது ஆதலின் 'சான்றோர் மெய்ம்மறை' என்ற பெயரின் சிறப்பு கூறப்பட்டுள்ளது. பதிற்றுப்பத்துக்குரிய பழைய உரையில் ஈண்டு சான்றோர் என்பது போரில் அமைதியுடைய வீரரை' என்று பொருள் கூறப்பட்டுள்ளது. போரில் அமைதியுடைய வீரர் என்றது முரண்பாடு போன்று தோன்றும். ஆனால் இங்கு கூறிய நுண்மையான விளக்கம் என்னவென்றால் போருக்குப் பொருந்தும், அமையும் வீரர்

என்பதாகும். இத்தகைய வீரர்களுக்கு, சான்றோர்க்கு மெய்புகு கருவி போல, கவசம்போல போர் நடந்த காலத்தில் சேரன் முன்னால் நின்றமையாலே சேரனை 'சான்றோர் மெய்ம்மறை' என்று அழைத்தனர்.

எயிலெறி வல்வில் லேவிளங்கு தடக்கை
ஏந்தெழி லாகந்துச் சான்றோர் மெய்ம்மறை
வான வரம்ப னென்ப கானத்து
—பதிற்றுப்பத்து 52 : 10 — 12

பதிற்றுப்பத்தில் வானவரம்பன் என்ற சேரனையும் 'சான்றோர் மெய்ம்மறை' என்று கூறியிருப்பதைக் காணலாம். வீரர்களைச் சான்றோர் என்றும் கூறும் மரபு 'தானைச் சான்றோர்' (பதிற்றுப்பத்து 82. 13) 'தேர்தரவந்த சான்றோர்' (புறம் 63 : 5) என்பவற்றால் உணரப்படும் என்று உ. வே. சாமிநாதய்யர் எழுதிய அடிக்குறிப்பு கவனிக்கத்தக்கது.

பாடுநர், கொளக்கொளக் குறைபடாச்
செல்வத்துச் செற்றோர்
கொலக் கொலக் குறையாத் தானைச்
சான்றோர்
வண்மையுஞ் செம்மையுஞ் சால்பு மறனும்
--பதிற்றுப்பத்து 82—12—14.

தானைச் சான்றோர் என்றதால் போரிடச் சான்றவர் என்ற பொருள் தருகின்றது. சான்றோர் என்ற சொல் போரிடுவதில் சால்புடையவர், போரிடுதற்கு அமைந்தவர், என்ற பொருள் தருகின்றது. சால் என்ற சொல் நிறைவு, மிகுதியைக் குறித்து வந்ததென்று கருத வேண்டும். போர்த் தன்மை நிறைந்தவர், மிகுந்தவர் சான்றோர் எனப்பட்டார். சிறுபாணாற்றுப்படையில் 'முல்லை சான்ற' (169) மருதம் சான்ற (186) என்ற வரிகள் வருவதைக் காணலாம். இவைகளில் 'சான்ற' என்ற சொல் அமைந்த என்ற பொருளில் வருவதைக் காணலாம். சான்ற என்ற சொல் சங்கநூல்களில் பொருந்திய, அமைந்த என்ற பொருளில் வந்துள்ளது. ஆதலின் சான்றோர் என்ற சொல் போருக்குப் பொருந்தியவர், அமைந்தவர், போர்வீரர் என்ற பொருள் தருமென்பதில் ஐயமில்லை.

இலக்கண உரையாசிரியர்கள் 'அவனும் அவன் படைக்கலமும் சாலும்' என்ற சொற்றொடரை எடுத்துக் காட்டுவர். சாலும் என்ற சொல் பொருந்தும், போதும் என்ற பொருளில் வருவதைக் காணலாம். படைக் கலத்துக்குப் பொருந்தும் வீரனே, சாலும் போர் வீரனே சான்றோன் என்றழைக்கப்பட்டான். புறநானூற்றிலும் 'தேர்தர வந்த சான்றோரெல்லாம் தோல்கண் மறைப்ப ஒருங்கு மாய்ந்தனரே'' என்று கூறிய வரியில் சான்றோர் என்ற சொல் போர்வீரரைக் குறித்து வழங்கியதைக் காணலாம். இங்கு போர்க்கு அமைந்தோர் என்று பழைய உரை கூறுவதைக் கவனிக்க வேண்டும்.

ஈன்றுபுறந் தருத லென்றலைக் கடனே
சான்றோ னாக்குத றந்தைக்குக் கடனே
— புறம். 312

சான்றோன் என்று புறநானூறு கூறுவது போர்வீரரையே என்பது உ. வே. சாமிநாதய்யர் கூறிய குறிப்புரையால் விளங்கும். தன்குலத்துக்குரிய படைக்கலப் பயிற்சியாகிய கல்வி, அதற்குரிய அறிவு, அதற்குரிய செய்கைகள் ஆகிய இவற்றால் நிறைந்தவனாகச் செய்தல் தகப்பனுக்குக் கடமையாம் என்று உரை கூறியிருத்தலைக் கவனிக்கவேண்டும். ஆதலின் சான்றோன், சான்றோர் என்பதற்குப் பொருள் முதலில் போர்வீரர் என்பதேயாகும். பிற்காலத்தில் சான்றோர் என்பதற்குச் சால்புடையவர் நல்லவர், ஒழுக்கமுடையவர் என்று உரை கூறினர். சான்றோர் என்பவர் சங்ககாலத்தில் இருந்த ஒருவகைப் போர் வீரர் என்று கருத வேண்டும்.

சங்ககாலத்தில் குடிமன்னர்களின் படையில் இனக்குழு மக்கள் (Tribals) தனித் தனிக்குழுவாக படைவீரர்களாக இருந்தனர் என்று கருத வேண்டியுள்ளது. பிற்காலத்தில் சோழர் படையிலும் கைக்கோளர் முதலிய போரிடும் சாதியினர், இனக்குழு மக்கள் வலங்கை, இடங்கை வகுப்புப்படைவீரர்களாகவே இருந்தனர். சங்ககாலத்தில் மழவர், மறவர், பாணர் போன்ற இனக்குழுக் குடிகள் மூவேந்தர்கள் படையில் படைவீரர்

களாக இருந்தனர். பதிற்றுப்பத்திலே சேரனை 'மழவர் மெய்ம்மறை' என்று கூறப்பட்டிருப்பதைக் காணலாம்.

மிசிபற் செருப்பிற் பூழியர் கோவே
குவியற் கண்ணி மழவர் மெய்ம்மறை
—பதிற்றுப்பத்து 21—23—24.

தண்கடற் படப்பை நன்னாட்டுப் பொருந
செவ்வூன் றோன்றா வெண்டு வை முதிரை
வாலுளைப் புரவி மழவர் மெய்ம்மறை
—பதிற்றுப்பத்து 55—6—9.

'மழவர் மெய்ம்மறை' என்று பதிற்றுப்பத்து கூறுவதால் மழவர் என்ற குடியினர் போர்வீரர்களாக இருந்ததையும் அவர்களுக்குக் கவசம் போன்று சேரமன்னன் இருந்தான் என்பதையும் அறிகிறோம். பூழியர் என்பாரும் செருப்புமலைச்சுடுத்த நாட்டில் இருந்தனர். அவர்களுக்குஅரசனாகவும் மழவர் என்ற வீரக் குடியினருக்குக் கவசமாகவும் சேர அரசர் இருந்தனர் என்று பதிற்றுப்பத்து கூறியுள்ளது. சங்ககாலத்தில் மூவேந்தர் படையில் பழங்குடி இனத்தைச் சேர்ந்த போர்வீரர்கள் தனித்தனியாக, படைகளாக அமைக்கப்பட்டு இருந்தனர் என்று கருத இடமுண்டு. பூழியர் கோவே, குடவர் கோவே என்று சொல்லப்பட்ட இடங்களில் சேரநாட்டுக்குரிய குடிகளின் பெயர்களால் சேர அரசன் விளிக்கப்பட்டதாகத் தெரிகின்றது. ஆனால் சான்றோர் மெய்ம்மறை என்ற பெயர்களில் பிற நாட்டுப் போர்வீரர்கள் அடங்கிய படைகளின் கவசம் போன்றவன் என்று சேர அரசன் விளிக்கப்பட்டதாகத் தெரிகின்றது. இவ்வாறு போரில் சிறந்த இனக்குழு மக்களைப் போர்ப் படைகளாக அழைக்கும் பழக்கம் சங்ககாலத்திலிருந்தே இருந்திருக்கின்றது.பதிற்றுப்பத்தில்மழவர் மெய்ம்மறை என்பதற்குப்பழைய உரையில் மழவர்என்றும் வீரர்களுக்குக் கவசம் போன்றோர் என்றும் கூறப்பட்டுள்ளது இது சான்றோர் மெய்ம்மறை' என்பது போல நின்றது என்று கூறப்பட்டுள்ளது. மழவர் ஒருவகை வீரர் என்றும் குதிரையையுடையவரென்றும் அகநானூறு கூறுவதை அதன் பழைய உரையில் ஒரு முக்கியமான செய்தியாகக் கூறப்பட்டுள்ளது மழவர் ஒருவகை வீரர் எனறதினாலே சான்றோரும் ஒருவகை வீரர் என்பது கொள்ளத்தக்கதே. இது போன்றே பாணர் என்பாரையும் ஒரு வகை வீரர் என்று பழைய உரையில் குறிப்பிட்டிருப்பதைக் காணலாம். இவர்கள் தமிழ் நாட்டின் வட எல்லையில் குறுநிலத் தலைவர்களாக வாழ்ந்ததை அகநானூறு 113 325 ஆம் பாடல்கள் கூறியுள்ளன. இந்தப்பாணர், பாடும் பாணரின் வேறான படைக் குடியினர் என்பதை உணர வேண்டும். இந்த வீரக் குடியினரான பாணரே பிற்காலத்தில் பெரும் பாணப்பாடி, பாணராஷ்டிரம் என்ற அரசை நிறுவி பல்லவர் போன்ற பெருமன்னரோடு சேர்ந்தும் முரணியும் வாழ்ந்தனர். பிற்காலத்தில் வந்த வாணகோவரையர்கள் இந்த பாணர் குடி வழிவந்த அரச பரம்பரையினராவர். ஆதலின் சங்ககாலத்தில் சேர, சோழ, பாண்டியர் பேரரசர்களாக இருந்த போதிலும் அவர்களுக்கடியில் பழங்குடி மக்களைச் சேர்ந்த படையினரும், குறுநிலத்தலைவர்களும் வாழ்ந்து வந்தனர் என்று தெரிகின்றது. சிறந்த போர்வீரர்கள் நிறைந்த குடியினரை (war tribes) முடிமன்னர்கள் பயன்படுத்தினர்.

பதிற்றுப்பத்தில் 'சான்றோர் மெய்ம்மறை' என்று சேர மன்னன் கூறப்பட்டது. ஒரு வரலாற்று நிகழ்ச்சி என்று கருத வேண்டும். இங்கு கூறப்பட்ட சான்றோர் ஒரு போர்க் குடியினர் எனறு கருதினால் அக்குடியினர் ஈழ நாட்டிலருந்து வந்தவர் என்று கருத பிற் காலச் சான்றுகள் உள்ளன. இன்று கேரளத்திலும் தமிழ்நாட்டிலும் உள்ள ஈழவர் தீயர், சாணர், நாடார் என்ற குடிமக்களின் வரலாற்றை ஆராயும்பொழுது இலங்கை நாட்டிலிருந்து தமிழ்நாட்டிற்கு இந்தக் குடிமக்கள் இரண்டு முறை குடியேறியதாகப் பரம்பரைச் செய்திகள் கூறுகின்றன. கி. மு. சில ஆண்டுகளுக்கு முன்னரே இந்தக் குடிமக்கள் முதலல் சேரநாட்டில் குடியேறினர் என்பது கேரளத்தில வாழும் ஈழ குலமக்களும், தீயர்களும் கூறும் பரம்பரைச் செய்திகளில் தெரியவருகின்றது.

கரிகாலச் சோழன் இலங்கையை வென்று இலங்கையிலிருந்து சில குடியினரை அடிமையாகக் கொண்டு காவிரிக் கரையைச் செப்பனிடப் பயன்படுத்தினுன் என்று செவி வழிச் செய்திகள் கூறுகின்றன. இவ்வகையாக ஈழவர் தமிழ்நாட்டிலும் வந்திருக்க வேண்டும். ஆனுல் முதலில் பெரும்பான்மையாக கேரளத்தில் ஈழவர் வந்திருப்பார்கள் என்று கருதசான்றுகள் உண்டு ' கேரளத்தில் ஈழவர் களிடையேயும் தீயவர்களிடையேயும் இலங்கை நாட்டிலிருந்து வந்ததற்குப் பரம் பரைக் கதைகள் மரபுச் செய்திகள் உள்ளன. 1்1 ஆம் ஆண்டு சென்னை ராஜ்ய சென்சஸ் அறிக்கையில் ஒரு செய்தி கூறப்பட்டுள்ளது. சைவர்களும் பௌத்தர்களும் ஈழநாட்டில் இருந்து சிதம்பரம் வந்து அரசன் முன்னர் வாதம் செய்தனர். அதில் சைவர் வெல்லவே ஈழ அரசனும் சைவனுக மாறிவிட்டான் ஈழவர்கள் இந்த ஈழ அரசனின் சந்ததியார் என்று தமிழ்நாட்டு சாணுரிடையே ஒரு பரம்பரைக் கதை வழங்குவது குறிப்பிடத் தக்கது.

தெற்குப் பக்கத்திலிருந்து வடக்கு இலங்கைக்கு வந்த ஈழவர் திருவாங்கூர், கொச்சி நாடுகளில் குடியேறினர் என்றும் அவர்களே தெங்ஙின மரத்தை (தென்னை), அதாவது தெற்குத் திசை மரத்தைக் கேரளத் துக்குக் கொண்டுவந்தனர்என்றும் கேரளத்து ஈழவர்கூறுவர். இந்த ஈழவரின் ஒரு பிரிவினர் கேரள ஈழவர் சாணுர் என்ற பெயரைக் குலப் பெயராகவும் பட்டப்பெயராகவும் சூடினர். இலங்கைத் தீவிலிருந்து வடக்கு மலபாரில் குடியேறியவர் தங்களைத் தீவர் கூறிக் கொண்டனர்

ஆனுல் நம்பூதிரிகளாலும் நாயர்களாலும்சாதிவகுப்பு ஏற்பட்டபோது தீயர் என்று தீண்டத்தகாதவராக ஆக்கப்பட்டனர். தீயர் தங்களை ஈழவரிலும் உயர்ந்த சாதியாகக் கருதுகின்றனர். ஈழவர் இலங்கையிலிருந்து வந்ததற்கு வேறொரு கதையும் கூறப்படுகின்றது. சேரமான் பெருமாள் ஆண்டுவந்த காலத்தில் கம்மாளர்களிடையே வந்த சண்டையில் நாட்டாண்மைக்காரர்களால் தச்ச ஆசாரிகள் துன்புறுத்தப்பட்டார்கள். ஆதலின் எல்லா தச்ச ஆசாரிகளும் இலங்கைக்கு ஓடி விட்டனர். மலையாள நாட்டில் வீடு கட்டவோ அகப்பை செய்யவோ கூட ஒரு தச்சனும் கிடைக்கவில்லை. ஆதலின் சேரமான் பெருமாள் ஈழத்துக் கண்டி அரசனை வேண்டிக் கொள்ளவே கண்டி அரசன் தச்ச ஆசாரிகளைத் திருப்பி அனுப்ப ஒப்புக் கொண்டான்.

ஆனுல் ஆசாரிகள் திரும்பவும் மலையாள நாட்டுச்குப் போக அஞ்சினர். அந்த ஆசாரிகளுச்குப் பாதுகாப்பாகவும் சேரமான் பெருமாள்அவர்களைத் துன்புறுத்தாமல் இருப்பதற்கும் தச்ச ஆசாரிகள் தங்களுடன் இரண்டு சோகர்களை (சோவர்களை) அனுப்பக் கண்டியரசனை கேட்டுக் கொண்டனர். ஆசாரிகள் அந்த இரண்டு சோகர்களுக்கும் அவர்கள் பரம்பரையினருக்கும் மூன்று மரக்கால் அரிசி கலியாணம் முதலிய சடங்குகளின்போது கொடுக்க வேண்டும் என்று உடன்பட்டனர். அதன் பிறகு ஆசாரிகள் மலையாள நாட்டுக்கு வந்தனர்.

சோகன், சேகோன் என்றபெயர்கள் ஈழவருக்கு இன்றும் வழங்குகிறது. இந்தப்பெயர்கள் சேவகன் என்ற பெயரின் திரிபாகும். பண்டைக்காலத்தில் சேவகன் என்ற பெயர் போர்வீரர்களின் தலைசிறந்தவருக்கு வழங்கியது. 'செங்கம் நடுகற்களில் சேவகன் என்ற பெயர் போரில் பல்லவ அரசருக்காகப் போரிட்டு வீரமரணம் அடைந்தவரைப் பற்றி வந்துள்ளதைக் கவனிக்க வேண்டும். வேறு கல்வெட்டுகளிலும் இந்த வழக்கு உள்ளது ஆதலின் இலங்கைமன்னன் தச்சஆசாரிகளுக்குப் பாதுகாப்பாக அனுப்பிய ஈழவர், சேவகன் என்றழைக்கப்பட்ட போர்வீரர்களாகும். அவர்களே சான்றோராக பதிற்றுப் பத்தில் அழைக்கப்பட்டனர். சேவகன் என்ற பெயர் வழக்கும் ஈழவர் போர்வீரர்களாக அக்காலத்தில் இருந்ததைக் குறிப்பிடுகின்றது. இந்தச் கம்மாளர் கதை வேறுவிதமாகவும் கூறப்படுகின்றது. இந்தக் கதை திருவஞ்சிக் குளத்தில் கல்வெட்டாக புதைக்கப்பட்டதாகக் கூறப்படுகின்றது. இலங்கையில் இருந்து தச்ச ஆசாரிகள் வந்தபோது சிலர் பின்

ளிலேயே தங்கி விட்டனர். அவர்கள் திரும்பவும் மலையாள நாட்டுக்கு வந்தபோது அவர்களை ஏற்கனவே வந்தஆசாரிகள் தங்கள் சாதியில் சேர்க்க மறுத்தனர். அவர்களைப் பதினெட்டான்மார், பூழித்தச்சர் என்று அழைக்கின்றனர். கேரளத்தில் பூழி நாட்டில் தங்கினதால் அவர்கள் பூழித்தச்சர் என்றுஅழைக்கப்பட்டனர். இன்றும் பழைய பிரெஞ்சுத் திட்டான மாகியில் பூழி நாட்டின் தலைமையிடம் இருந்ததைக் குறிப்பிட பூழித்தலை என்ற ஊர் உள்ளது. இந்த ஊரிலும் சுற்றிலும் தீயர்கள் மிகுந்து உள்ளனர். ஈழவரும் தீயரும் முற்காலத்தில் போர்வீரர்களாக இருந்தனர் என்பதை அவர்களுடைய சில சடங்குகளும் காட்டுகின்றன. தீயர்களின் திருமணச் சடங்குகளில் சண்டைபோடுவதற்குச் செல்வது போல் மணமகன் வேட்டியைக் கிரேப் பாய்ச்சி உடுத்துக்கொண்டு கேடயமும், வாளும் எடுத்துச் செல்வான். மாப்பிள்ளைத் தோழராக வரும் இருவர் போர்வீரர்போல உடுத்திக் கூட இருந்து ஆடிக்கொண்டே செல்வர்.

தீயர்களின் சாதித்தலைவனுக்குப் பெயர் தண்டன்என்பதாகும். தண்டன்என்றபெயர் தண்டுக்குத் தலைவன் என்று பொருள் தரும். தண்டு என்பது பிற்காலத்தில் சேனையைக் குறிக்கும். தீயர்கள் போர்வீரர்களானதால் போர் வீரர்களின்தலைவன், வீரர்கள் அடங்கிய தண்டின் தலைவன் தண்டன் என்றழைக்கப்பட்டிருக்கலாம். போரில் முதன்மையாக நின்றவர்களை முதலி என்று அழைத்தது பின் சாதிப் பெயராகத் தமிழ் நாட்டில் மாறியதை இது சார்பாகக் கவனிக்க வேண்டும். தொல்காப்பியத்தில் போரில் சிறந்த வீரத்தைக் குறித்து வழங்கிய பெயரான பிள்ளை மறம் என்ற பெயரடிப்படையாகத் தோன்றியதே பிள்ளை என்ற சாதிப் பெயராகும். போரில் சிறந்தோருக்கு வழங்கிய பிள்ளை என்ற பெயர் பின்னர் சாதிப் பெயராக மாறியதைக் காணலாம்.

தீயர்களின் திருமணத்தில் மணமகன் ஊர்வலமாகச் செல்லும்போது தண்டன் தலைமையில் போர் புரிவதுபோல வாளைச் சுழற்றி போர்வீரர் உடையில் மணமகனும் சிலரும் செல்லும் சடங்கு தீயர்களின் பழைய தொழிலின் எச்சமாகவும் நினைவுமரபாகவும் கருதலாம். ஈழவரும் தீயரும் போர்வீரர்கள் என்பதற்கு மற்றொரு சான்றும் உள்ளது. கன்னட நாட்டில் கள்ளிறக்குவோர் 'ஹலெபெய்க்க' (Halepaika) என்றழைக்கப்படுகின்றார்கள். இவர்கள் ஈழவர் போலவே உருவத்திலும் நிறத்திலும் உள்ளனர் 'ஹலெபெய்க்க' என்ற பெயர் 'பழைய பய்க்க' என்று பொருள்படும் என்றும் பழைய காலத்தில் இக்குடியினர் போர்வீரர்களாக இருந்ததால் ''ஹலெபய்க்க'' (பழையபோர் வீரர்) என்றழைக்கப்பட்டதாகக் கூறுகின்றனர்.

விஜயநகர அரசாட்சியின்போது இக்குடியினரில் ஒருவன் சேனைத்தலைவனாக இருந்து ஜாகிர் பெற்றதாகவும் சொல்லப்படுகின்றது. இந்தக் கன்னடக் குடியினர் தங்களைத் தெங்கின வகுப்பு என்று சொல்லுகின்றனர். மலையாளநாட்டில் வாழும்ஈழவர்களும் இடைகாலத்தில் மலையாள நாட்டு மன்னர்களுக்குப் போர்வீரர்களாகப் பணிபுரிந்திருக்கின்றனர். போரில் இறந்துபட்டவர்களும் உரிமைகள் பெற்றிருக்கின்றனர். 18 ஆம் நூற்றாண்டில் அம்பலப்புழை ராஜாவின் படையில் போர் வீரர்களாக இருந்தவர்களில் சேகுவர் என்ற ஈழவரே நிறைய இருந்தனர் என்று வரலாற்றுஆசிரியர்கள் எழுதியுள்ளார். சேகுவர் என்ற பெயர் சேவகர் என்பதன் மாற்றமே. சங்க காலப் பெயரான சான்றோர் என்பதும் பிற்காலப்பெயரான சேவகர் என்பதும் ஒரே பொருளுடையன. பார்த்தலோமியோ (Friar Bartolomeo) என்ற வெளிநாட்டுக்காரர் ஈழவர்களைப்பற்றி எழுதியுள்ளார். அதில் ஓணம் திருவிழாவில் திருவனந்தபுரத்து ஈழவர்கள் இரண்டு பகுதியாகப்பிரிந்து கைதமுக்குஎன்ற இடத்தில் போர் புரிவதைப்பற்றி எழுதியுள்ளார். இதில் கலந்து கொள்ளாத ஈழ இளைஞன் அவமானப்படுத்தப்பட்டான் என்று எழுதியுள்ளார். இந்தச் சடங்கும் ஈழவர் போர்வீரராயிருந்ததைக் குறிக்கும். ஈழவர்களில் உள்ள வகுப்புகளில் பாண்டி ஈழவர் திருவனந்தபுரத்தில் நிறைய உள்ளனர். மலை

யாள ஈழவரில் சோழி ஈழவர் என்ற வகுப்பு உள்ளது. இவர்கள் சோழநாட்டில் இருந்து சென்ற சாணர், நாடார் ஆகலாம். கேரளத்தில் இவர்களைப் பிற்காலத்தில் குடிபெயர்ந்து வந்தவராகக் கருதுவதே சான்றாகும். ஈழவர்களில் நாடி என்ற வகுப்பினர் கார்த்திகைப் பள்ளி என்ற ஊரைச்சுற்றி இருக்கின்றனர். இவர்களுடைய பெயர் தமிழ்நாட்டு நாடார் பெயரோடு ஒத்துள்ளது. மலையாள ஈழவர்கள் அக்காலத்தில் விரும்பித் தரித்த பட்டப் பெயர் சாணன் என்பதாகும். இப்பெயர் சான்றோன் என்ற பெயரின் மாற்றம் என்று தர்ஸ்டான் கால்ட்வெல் முதலிய பலரும் எழுதியுள்ளனர்.

சான்றோன் என்பதற்குத் தலைவன் என்று தர்ஸ்டன் பொருள் கூறியுள்ளார். இந்தச் சான்றோன் என்ற பட்டம் ஈழவர்களின் சிறந்தோருக்கு அரசர்களால் வழங்கப்பட்டதாகவும் பின்னர் குடும்பப் பட்டமாகவும் பெயராகவும் மாறியதாகக் கூறுவர். ஆனால் இந்தப்பெயர் இன்று தமிழ் நாட்டில் இழிவாகக் கருதப்படுகின்றது. ஈழவர் போர்த் தொழிலில் இருந்து கள்ளிறக்கும் தொழிலில் இறங்கின போது சான்றோன் (சாணன்) என்ற பெயரும் இழிவான பெயராகக் கருதப் பட்டது. மலையாள நாட்டில் சான்றோன் (சாணன்) என்ற பட்டப்பெயருக்கு அடுத்த படியாக சிறந்ததாக பணிக்கர் என்ற பெயர் வழங்கப்பட்டது. பணி செய்பவன் பணிக்கன் சில இடங்களில் தண்டன் என்ற பெயர் பட்டப்பெயராகத் தலைவருக்கு வழங்கப்பட்டது. தண்டன் என்பது தண்டம் செய்பவன், தண்டை செலுத்துபவன் என்ற பொருளில் வழங்கியது. ஆசான் என்ற பெயரும் வழங்கிற்று. களரி பயிற்று என்ற ஆயுதப்பயிற்சி சாலைகளில் சிறந்த ஈழவர்க்கு ஆசான் என்ற பெயரும் வழங்கிற்று. தெற்கு திருவனந்தபுரத்தில் ஈழவர் முதலியார் என்ற பட்டத்தைப் பூண்டு கொண்டது அவர்கள் போர்ப் பணியில் பெற்ற தலைமையால் என்பது தெளிவாகின்றது.

ஆந்திர நாட்டில் தெலுங்கு பேசும் இடிகர் என்ற சாதியினர் கள்ளிறக்கும் தொழிலை உடையவர். இவர்களும் தங்களை முற்காலத்தில் போர்வீரர்களாக இருந்ததாகக் கூறிக்கொள்கின்றனர் தீவர் என்றும் சாணர் என்றும் தங்களைக் கூறிக்கொள்கின்றனர். ஆதலின் கேரளத்திலும் கன்னட நாட்டிலும், ஆந்திர நாட்டிலும் கள்ளிறக்குவோர் ஈழத்திலருந்து வந்ததாகவும் பழைய காலத்தில் போர்வீரர்களாக இருந்ததாகவும் கூறிக்கொள்வதால் அதற்கேற்ப மரபுகள் கதைகள் சடங்குகள் இருப்பதால், அவர்கள் தமிழ் நாட்டு சாணர்கள், நாடார்கள், கிராமணிகள் என்றே கருத இடமுண்டு.

இவர்களின் முன்னோர்கள் பதிற்றுப் பத்தில் கூறப்பட்ட போர்வீரர்களான சான்றோர் என்றே கருத வேண்டும். அவர்கள் ஈழத்திலிருந்து முதலில் குடியேறிய இடம், சேரநாடாக இருக்க வேண்டும். பின்னர் பல்லவர் காலத்தில் இன்றைய தமிழ்நாட்டில் குடியேறினர் என்று கருத பல்லவர்கள் கல்வெட்டுச் சான்று உள்ளன. பல்லவர் கல்வெட்டுச் சான்றைத் தாங்கும்படி வெளிநாட்டு பயணிகளின் செய்திகளும் உள்ளன. கி. பி முதல் இரண்டு மூன்று நூற்றாண்டுகளில் சான்றோர்கள் (சாணர்கள்) சேரர்படையில் போர்வீரர்களாக இருந்ததைப் பதிற்றுப்பத்து குறிப்பிடுகின்றது. ஆனால் ஈழநாட்டிலிருந்து வந்ததாகக் குறிப்பிடவில்லை.

இருப்பினும் பிற்காலக் கல்வெட்டுச் சான்றுகள், அதற்கும் மிகப் பிற்கால சடங்குகள், கதைகள், மரபுகள் எல்லாம் அவர்கள் ஈழநாட்டிலருந்து (வடஇலங்கையிலருந்து) வந்ததைக்காட்டுகின்றன பல்லவர்காலத்தில் தான் தென்னைமரம் நிறைய பயிரிடப்பட்டதற்குக் கல்வெட்டுச்சான்றுகள் உள்ளன சங்க இலக்கியத்தில் தென்னைமரம் மிக அரிதாகக் கூறப்பட்டுள்ளது ஆனாலும் தென்னைமரத்திலிருந்து கள்ளிறக்குவது கூறப்படவில்லை. பனைமரத்தில் கள்ளிறக்குவது சங்க காலத்தில் நிறைபக் கூறப்பட்டுள்ளது. இந்தச் செய்தி எதைக் காட்டுகின்றது? சங்ககாலத்தில் தென்னைமரம் நிறைபப் பரவவில்லை, அதிலிருந்து கள்ளிறக்கப்படவில்லை என்பதையே

காட்டுகின்றது. இந்தச் செய்திக்கு ஆதரவாக பெரிப்புளுஸ் எழுதிய நூல்ல் தமிழகத்திலிருந்து வெளிநாட்டுக்கு ஏற்றுமதியான பொருள்களில் தேங்காயும் தென்னைமரப் பொருள்களும்கூறப்படாததை முக்கியமாகக் கவனிக்க வேண்டும். பெரிப்புளுஸ் எழுதின நூல் முதல் நூற்றுண்டு ஆகும். இந்தச் சான்றும் சங்க நூல்களில் பெரும்பாலானவையின் காலத்தைக் கி.பி. முதல் இரண்டு நூற்றுண்டுகளுக்குப் பின்னர் கொண்டுபோக முடியாது என்பதைத் தெளிவாகக் காட்டுகின்றது.

வெளி நாட்டு ஆசிரியர்களில் முதன் முதல் தென்னையைப் பற்றிக் கூறியிருப்பவர் C..m s Indico ple.s.e; என்பவராவர். இவர் கி. பி.522 ல் இருந்து 547 வரை குறிப்பு எழுதியுள்ளார். சிரியன் சிருஸ்துவர்களுடைய பழைய செப்பேட்டுக் குறிப்புகளிலும் ஒன்பதாம் நூற்றுண்டில் ஈியர்கள் தென்னைமரத் தோட்டம் வைத்திருந்த செய்தி கூறப்பட்டுள்ளது. இந்தச் செய்திகள் பல்லவர் கல்வெட்டு செப்பேட்டு செய்திகளோடு ஒத்திருப்பது தெளிவாகின்றது. சிரியன் கிருஸ்துவர்களின் பரம்பரைச் செய்திகளில் அவர்களே ஈழவர்களே ஈழநாட்டிலிருந்து மலையாள நாட்டிற்கு அழைத்ததாகக் கூறுவதுண்டு. ஈழவர்கள் கொண்டுவந்தவைகளில் தென்னையொடு அலரிச்செடி, கமுகு, ஒருவகை எலுமிச்சை ஆகியவற்றையும் கூறுவர். ஈழத்தலரி என்ற செடி தமிழ் நாட்டிலும் உள்ளது.

கல்வெட்டுச் சான்றுகளில் பல்லவர்கள் காலத்தில் ஈழவரைப்பற்றிய செய்திகளைக் காணலாம். ஈழவர்கள்மேல் ஆள்வரியும்,மரம் நடுவதற்குரிய வரியும், கள் இறக்குவதற்குரிய வரியும் பல்லவர் காலத்திலும், சோழர் காலத்திலும் போடப்பட்டது. ஈழம்பூட்சி என்ற வரி ஈழவர்கள் போட்ட வரியாகும். பூட்சி என்றசொல் ஆளைக் குறிக்கும். காட்டுப் பூச்சி என்ற ஆர்காட்டுப் பேச்சுவழக்கில் காட்டாள் என்ற பொருளில் பூட்சி என்ற சொல் வழங்குகின்றது. ஒன்பதாம் நூற்றுண்டைச் சேர்ந்த இரண்டாம் நந்திவர்மப் பல்லவனின் தண்டந்தோட்டு செப்பேட்டில் "கண்ணலக்காணமும் ஊராட்டும் குசக் காணமும் தட்டுக்காயமும் ஈழப்பூட்சியும் மிசைப்பூட்சியும்...தமனகந்நடப் பெறுவதாகவும் காவு தெங்கிடப் பெறுவதாகவும்" என்று வருகின்றது. இதில் ஈழப்பூட்சி என்ற வரியும். காவுதெங்கிடப் பெற உத்தரவும் ஈழவர் ஏறப்பெருத தெங்கு மரங்களும் குறிப்பிடப்பட்டிருப்பதைக்காணலாம்.

இதே போன்று மூன்றும் நந்திவர்மனின் வேலூர்பாளையச் செப்பேடும் "இவர்கள் மனம் இன்றி ஈழவர் ஏறப்பெருதவராகவும்" என்று கூறுகின்றது. ஈழவர்கள் கள்ளிறக்கக் கூடாது என்று சொல்வதால் அந்த மரங்கள் தேங்காய்க்காகவும் இளநீர் அபிஷேகத்துக்காகவும் பயன்படுத்தபட்டிருக்கலாம் என்று கருத வேண்டும். கர்ப்பூரம் இளநீர் அபிஷேகம் முதலிய வழிபாட்டுச் சடங்குகள் பல்லவர் காலத்தில் தோன்றியனவாகும். கர்ப்பூரமும், தென்னையும் வெளிநாட்டுப் பொருள்கள் என்பதை உணர வேண்டும்.

ஈழவர்கள் பல்லவர்கள் காலத்தில்தெங்கு நடுதலும் ஏறுதலும் கள் இறக்குவதலும் ஆன தொழில்களைச் செய்துவந்திருக்கின்றனர். சோழர் காலத்தில் ஈழவர்மேல் போட்ட வரி 'சான்றுன் மாட்டுமேனிப்பொன்' என்றழைக்கப்பட்டுள்ளது. ஈழவர் ஈழக்கையர் என்று சோழர் கல்வெட்டில் குறிக்கப்படுகின்றார்கள்.ஈழம் புஞ்சை (S. I. I. XVII 12) ஏனக்கானும் என்ற வரிகளும் ஈழவர்மேல் போடப்பட்ட வரிகளாகும். இது போன்றே கேரளத்தில் கி.பி 8 4 ல் ஈழவர்க்குக் கொடுக்கப்பட்ட உரிமை சாசனத்தில் வேற்று நிலங்களில் தென்னை நடும் உரிமையும், தென்னை மரம் ஏற தாய்க்கயிறு உரிமையும், ஏணி உரிமையும் கொடுக்கப்பட்டுள்ளது. பிற்காலப் பல்லவர் காலததை ஒதது மலையாள நாட்டிலும் ஈழவர்கள் கள்ளிறக்கும் தொழிலைச் செய்து வந்தனர் என்பது தெரிகின்றது.

தென்னைமரம் சங்ககாலமான கி. பி. முதல்,இரண்டு,மூன்றுநூற்றுண்டுகளில் பரவ

லாக கேரளா உள்பட்ட அன்றைய தமிழகத்தில் இருந்ததில்லை என்பதற்குச் சங்க இலக்கியமே சான்று தருகின்றது.[3] புறநானூற்றில் ஒரு பாடலில் இளநீர் என்ற சொல் வருகின்றது. பெரும்பாணாற்றுப்படையிலும் இச்சொல் வருகின்றது. ஐங்குறுநூறு, நற்றிணை, குறுந்தொகை ஆகிய முந்திய சங்க நூல்களில் தென்னைமரத்தைப்பற்றி யாதொரு குறிப்புமில்லை. தென்னைமரம் சங்க காலத்தில் அரிதாகக் காணப்பட்டது. பரவலாகவும் மிகுதியாகவும் இருந்திருந்தால் சங்க இலக்கியத்தில் அகத்திணையில் கருப்பொருளாகக் கூறப்பட்டிருக்கும். மிகப் பிற்காலத்து இலக்கண நூல்களும் தென்னை மிகுந்திருந்தபோதுகூட பழைய சங்ககால மரபைப் பின்பற்றித் தென்னையை நெய்தற்திணைக்குரிய கருப்பொருளாகக் கூறவில்லை. சங்கநூல்களில் அரிதாகத் தென்னைமரம் கூறப்பட்டிருந்தாலும் அதிலிருந்து கள் இறக்குவது கூறப்படவே இல்லை. ஆனால் பனைமரத்தில் இறக்கிய கள்ளைப்பற்றிப் பல சங்கப்பாடல்கள் கூறுகின்றன. ஈச்சமரக் கள் கூறப்பட்டுள்ளது. ஆதலின் தென்னைமரம் சங்ககாலத்தில் தமிழகத்து வந்ததாயினும் அதிலிருந்து கள் எடுக்கும் தொழில் வரவில்லை என்பது தெளிவாகின்றது.[4] தென்னைமரம் பசிபிக் தீவிலிருந்தும், ஈழத்திலிருந்தும் இந்தியாவுக்கும் தமிழகத்திற்கும் வந்ததாகப் பல தாவர நூல் அறிஞர்கள் ஆராய்ந்து கூறியுள்ளனர்.

கி மு சில நூற்றாண்டுகளுக்கு முன்னரே தென்னை இலங்கையிலிருந்து தமிழ்நாட்டிற்கு வந்திருக்கலாம் என்றும் அறிஞர்கள் கருதுகின்றனர். ஆதலின் ஈழவர் கி. மு ஓரிரண்டு நூற்றாண்டுகளிலோ அல்லது கி பி. முதலிரண்டு நூற்றாண்டிலோ தமிழகத்திற்கு வந்திருந்திருக்கலாம். அவர்கள் தென்னை மரத்தைக் கொண்டுவந்திருக்கலாம். ஆனால் கள் இறக்கும் தொழிலை அக்காலத்திலேயே கொண்டுவந்திருக்க முடியாது. கேரள அறிஞர்கள் பரம்பரைக் கதைகளை அடிப்படையாகக் கொண்டு கேரளத்துக்கு ஈழவர் கி. மு. அல்லது கி. பி. முதல் இரண்டு நூற்றாண்டுகளில் தென்னையோடு தென்னங்கள் இறக்கும் தொழிலைக் கொண்டுவந்தனர் என்று கூறுவதற்குச் சங்க நூல்களில் சான்றுகள் இல்லை. பெரிப்புளூஸ் முதல் நூற்றாண்டில் எழுதிய ஏற்றுமதிப் பொருளில் தென்னை இல்லை. அவ்வளவு பரவலாகவும் மிகுதியாகவும் தென்னை அன்றைய சேரநாட்டிலோ தமிழகத்திலோ இல்லை.

ஆனால் இறக்குமதிப் பொருள்களில் யவனர் கொண்டுவந்த மது உள்ளது. பல வகை மதுவைப்பற்றி அதாவது அரிசிக் கள், தினைக் கள், பழங்களிலிருந்து இறக்கிய கள், பனங் கள், ஈச்சங் கள், யவனர் சாடிகளில் அனுப்பிய மது ஆகியவற்றை மகிழ்ச்சியுடன் குறிப்பிட்ட சங்கப்புலவர்கள் தென்னங் கள்ளைக் குறிப்பிடாது விட்டுவிடுவரா? ஆதலின் ஈழவர் முதலில் சங்கக்காலத்தில் வந்தபோது தென்னங் கள்ளை இறக்கும் தொழிலைக் கொண்டுவரவில்லை.

ஆனால் அவர்கள் சேரர்படையில் சான்றாராக, போர்வீரராக வந்து சேர்ந்ததற்குப் பதிற்றுப்பத்து ஆதாரம் தருகின்றது. இதே பதிற்றுப்பத்து தென்னைமரத்தைப்பற்றிக் கூறியிருப்பினும் சான்றோர் கள்ளிறக்கியதைப் பற்றியோ தென்னங் கள்ளைப்பற்றியோ கூறவில்லை. ஆதலின் கி பி. முதல் இரண்டு நூற்றாண்டுகளில் ஈழ நாட்டிலிருந்து போர் வீரராகச் சான்றோர் சேர நாட்டிற்கு வந்திருக்கலாம் என்று கருத வேண்டும்.

சங்கநூல்களில் ஈழவர், தீவகர் என்ற பெயர்கள் இல்லை. பல்லவர் காலத்திலேதான் தென்னை மரத்திலிருந்து கள்ளிறக்கும் தொழிலைத் தெரிந்த ஈழவர் இலங்கையிலிருந்து சேர நாட்டிற்கும் தமிழ்நாட்டிற்கும் வந்தனர். இவர்களை ஈழவர் என்று அழைத்தனர். ஈழவரே தென்னங் கள்ளை இறக்குவதை முதலில் தமிழகத்தில் கொண்டுவந்ததால் கள்ளிற்குப் பெயராக ஈழம்என்ற பெயர் பிற்காலத்தில் வழங்கலாயிற்று. ஆனால் இந்த ஈழவரும் தங்களைச் சான்றான் என்று பழைய பெயரால் கூறிக்கொள்வதிலேயே பெருமைப்பட்டனர். ஈழவர்களின் தலைவர்களுக்குச் சான்றான் என்ற பட்டம் அரசர்களால் அளிக்கப்பட்டது. ஆதலின் ஈழவர்களும் கள்ளிறக்கும்

தொழிலைவிட தங்களுடைய முற்காலத் தொழிலான போர்த்தொழிலையே பெருமையாகக் கருதிச் சான்றோன் என்ற பட்டப் பெயரை வைத்துக் கொள்ள ஆசைப்பட்டனர்.

12 ஆம் நூற்றாண்டில் பெரியபுராணம் எழுதிய சேக்கிழாரும் ஈழகுலச் சான்றோர் என்று ஏனாதிநாதரைக் குறிப்பிடுகின்றார். ஏனாதி என்ற பெயர் படைத்தலைவர் பெயர் என்றும் குறிப்பிட்டுள்ளார். இச்செய்தியும் ஈழத்தில் இருந்த சான்றோர் சாதியினர் படையில் இருந்தனர், படைத்தலைவராக இருந்தனர் என்பதைக் காட்டுகின்றது. பல்லவர், சோழர் கல்வெட்டுகளில் ஈழவர் என்ற பெயர் பரவலாக இருந்தாலும் தமிழகத்து ஈழவர்கள் சான்றார் (சாணார்) என்றுதான் இன்றும் சொல்லிக்கொள்கின்றனர். கிராமணி என்ற பெயராலும், நாடார் என்ற பெயராலும் இன்று அழைக்கப்படுபவர் 'சான்றோர்மெய்ம் மறை' என்று பதிற்றுப்பத்தில் அழைக்கப் பட்ட 'சான்றோர்' என்பதில் ஐயமில்லை. இந்தச் சான்றோர் இன்றைய சாணார் சாதியாரின் முன்னோர் என்று கருத வேண்டும். சங்க காலத்தில் இவர்கள் சேரநாட்டுக்கு வந்து சேரமன்னர் படையில் போர்வீரராக சான்றோர் என்ற பெயருடன் இருந்தனர். இவர்களுக்குப் பின்னர் பல்லவர் காலத்தில் வந்த ஈழவர் தீயர் ஆகியோர் கள்ளிறக்கும் தொழிலைப் பல்லவர் காலத்தில் கொண்டுவந்தனர்.

கள்ளிறக்கும் தொழில் காரணமாக சான்றோர் (சாணார்), ஈழவர், தீயர் ஆகிய மூன்று வகுப்பினரும் தாழ்ந்த சாதியினராகக் கருதப்பட்டனர். பல்லவர்கள் காலத்தில் தான் வைதீக இந்து மதத்தின் பாதிப்பால் சாதிகள் பெருகின. சங்கிர்ண சாதிகள் தோன்றின. வைதீக இந்து மதத்தில் எள்ளைக் கசக்கி எண்ணெய் எடுப்போரைத் தாழ்ந்த சாதியாராகக் கருதினதுபோல தென்னம் பாளையைக் கசக்கிக் கள்ளிறக்குவோரையும் தாழ்ந்த சாதியினராகக் கருதினர்.

ஆனால் அதே சமயத்தில் போர்த்தொழிலில் சிறந்தோர் உயர்ந்த சாதியினராகக் கருதப்பட்டனர். ஆதலின் தங்கள் தங்கள் சாதியை உயர்த்துவதற்குப் பிற்காலத்தில் போர்த் தொழிலில் சேருவது வழக்கமானது. போர்த்தொழில் செய்த கைக்கோளர் நெய்யும் தொழிலுக்குச் சென்றபோது சாதியில் தாழ்வு பெற்றனர். அதுபோலவே சங்க காலத்தில் போர்த்தொழில் செய்த சான்றோரும் கள் இறக்கும் தொழில் செய்தபோது தாழ்ந்த சாதியினராக்கப்பட்டனர்.

## அடிக்குறிப்புகள்


1. Castes and Tribes of South India, Edgar Thurston.
2. Seminar on Hero Stones, Edited by R. Nagasamy.
3. செந்தமிழ்ச்செல்வி, பிப்ரவரி 1974. இளசீர்— பி. எல். சாமி.
4. (a) De Condolle A. 1884, Origin of cultivating plants-Kegan Paul Trench and Co., London.
   (b) Vevilov, V. I. (1926) The origin, variation, immunity and breeding of cultivated plants-Chronics Botanica 13 (16) 1949-50.
   (c) An introduction to the Botany of Tropical Crops-Leslie S. Cobley.

# தமிழகப் பிரசஸ்திகளும் மெய்க்கீர்த்திகளும்

## பகுதி 3 வரலாற்றியல்பு

(17 வது இதழ் தொடர்ச்சி)

வி. சிவசாமி

பிரசஸ்திகளும், மெய்க்கீர்த்திகளும் அவ்வக்கால மன்னர் ஆதரவினைப் பெற்ற அவைப் புலவராலோ, கவிதை ஆற்றல் வாய்ந்த அதிகாரிகளாலோ, பிற புலவர்களாலோ இயற்றப்பட்டவை. இவை வெளிப்படையாகவே புலப்படுத்துவதுபோல, மன்னரையோ, பிறரையோ பற்றிய புகழுரைகளாகவே விளங்குகின்றன. எனினும், இப்புகழுரைகளுக்கும் அடிப்படையிலே பெரும்பாலும் வரலாற்றுரீதியிலான வெற்றிகளோ, பிற சம்பவங்களோ, புகழப்படுவோரின் பண்புகளோ, குணதிசயங்களோ அமைந்துள்ளன எனலாம். மெய்க்கீர்த்தி எனும் பெயர் வேறு வகையான புகழுரைகளிலிருந்து இதனை வேறுபடுத்திக் காட்டுவதற்காகப் பயன்படுத்தப் பட்டதாகலாம். வெறும் புகழுரைகளாக, பொய்க்கீர்த்திகளாக அன்றி மெய்க்கீர்த்திகளாகவே இவை விளங்க வேண்டுமென இவ்வகைப்பிரபந்தத்தினை உருவாக்கியவர்கள் கருதியிருப்பர் எனக் கொள்ளலாம்.

முன்னர் எழுதிய கட்டுரைகளிலே பிரசஸ்தி, மெய்க்கீர்த்தி ஆகியனவற்றின் முன்னோடியான இலக்கிய வடிவங்கள், அவற்றின் வளர்ச்சிபற்றிக் குறிப்பிட்டிருந்தோம். பிரசஸ்தியின் முன்னோடிகளான காதா, நாராசம்ஸி போன்றனவும், மெய்க்கீர்த்தியின் முன்னோடியான புறப்பாடல்கள், சிலப்பதிகாரம் முதலியனவும் உண்மையான வரலாற்றுச் சம்பவங்களை ஓரளவாவது அடிப்படையாகக் கொண்டுள்ளமை கவனித்தற்பாலது.

மேற்குறிப்பிட்டவகைப் பிரபந்தங்களை இயற்றியோர் தாம் குறிப்பிடும் நிகழ்ச்சிகள், புகழும் மன்னரின் குணதிசயங்கள் முதலியனவற்றைப் பெரும்பாலும் நேரிலேயே கண்டிருப்பர். தமக்கு முற்பட்ட காலச்சம்பவங்கள், மன்னரின் குணதிசயங்கள், வெற்றிகள் முதலியனவற்றைப் பிறர் மூலமோ, மன்னராலே பேணப்பட்டுவந்த ஆவணங்கள் மூலமோ அறிந்திருப்பர். சமுத்திரகுப்தனின் அலஹபாத் தூண் பிரசஸ்தியினை இயற்றிய ஹரிசேனன், குப்தப் பேரரசிலே கடமையாற்றிய மிக உயர்தர அதிகாரியாவர்.[73] இதுபோலவே, வேள்விக்குடிச் செப்பேடுகளிலேயுள்ள தமிழ்ப் பிரசஸ்தியினை யாத்த ஏனதிச் சாத்தன் ஒரு சேனாபதியாவன்.[74] மன்னர் மேற்கொண்ட நடவடிக்கைகளிலே, போர்க் காலத்தில் என்றால் என்ன, சமாதான காலத்தில் என்றால் என்ன புலவர்கள் நன்கு கலந்து கொள்வர். அரசர்களுக்கும், புலவர்களுக்கும் இடையிலான தொடர்புகள் மிக அன்னியோன்னியமாக நிலவின என்பதற்குச் சங்க நூல்கள் பிற்காலத்தமிழ் நூல்கள் மட்டுமின்றி வடமொழி நூல்களும் தக்க சான்று பகருவன. பிரசஸ்தி சமகால வேந்தனை மட்டுமின்றிப் பெரும்பாலும் அல்லது ஓரளவிற்கு அவனுடைய முன்னோர் — சில வேளைகளிலே, பல நூற்றாண்டுகளுக்கு முற்பட்ட காலத்

திலே வாழ்ந்த முன்னோரைப்பற்றியும் புகழ்ந்துரைக்கும். ஆனால், மெய்க்கீர்த்தியோ சமகால வேந்தனை மட்டுமே விதந்து கூறும். எடுத்துக்காட்டாக, பல்லவ நந்திவர்மனின் காசக்குடிச் செப்பேடுகள்,[75] பாண்டிய நெடுஞ்சடையனின் வேள்விக்குடிச் செப்பேடுகள்,[76] சோழ ராஜேந்திரனின் திருவாலங்காட்டுச் செப்பேடுகள்[77] முதலியனவற்றிலே வரும் பிரசஸ்திகள் முதலாம் ராஜராஜனின் மெய்க்கீர்த்திகள்[78] முதலியனவற்றைக் குறிப்பிடலாம்.

பிரசஸ்திகளை எழுதிய ஆசிரியர் தத்தம் புரவலரான மன்னருக்குச் சற்று முற்பட்ட காலத் தலைமுறையினரைப்பற்றித் தாமே அறிந்திருப்பர் அல்லது கேள்விப்பட்டிருப்பர். அரசரின் ஆணையினால் எழுதப்பட்டுப் பேணப்பட்டு வந்த மரபுகள் அல்லது செவி வழியாகப் பேணப்பட்டு வந்த மரபுகள் அல்லது இரண்டினையும் இவர்கள் பயன்படுத்தியே தமக்குப் பல ஆண்டுகளுக்கு முற்பட்ட மன்னரைப்பற்றிய தகவல்களைப் பெற்றனர் எனக் கொள்ளுதல் தவறாகாது. மேலும் குறிப்பிட்டகால மன்னரைப்பற்றிய பழைய இலக்கிய மரபுகளிலே பேணப்பட்டு வந்த செய்திகளையும் அவர்கள் பயன்படுத்தியிருப்பர்.

பழைய காலம் தொட்டு, இந்திய மன்னர் அவைகளிலே ஆளும் அரசர், அவரின் முன்னோரின் பெயர்ப்பட்டியல், அவர்களின் சாதனைகள்பற்றிய ஆவணங்கள் (வம்சாவளிகள்) பேணப்பட்டு வந்தன. இதற்குப் புராணங்கள் ஓர் எடுத்துக்காட்டாம். புராணங்களுக்கு உரிய பஞ்சலக்ஷணங்களில் ஒன்று கலியுகத்தில் ஆட்சி செய்த மன்னர் வரலாறும்.[79] வம்சாவளிகள் பேணப்பட்டு வந்தமையினை அர்த்தசாஸ்திரம்,[80] யாஜ்ஞவல்க்யஸ்மிருதி[81] போன்ற நூல்களாலும் அறியலாம். மேலும், கி. பி. ஏழாம் நூற்றாண்டு முற்பாதியில் இந்தியாவிற்கு வந்த சீன யாத்திரீகரான கியூன்சாங் என்பவர் கூறியிருப்பன மனங் கொளற்பாலன. அதாவது 'நிகழ்ச்சிகளை ஒவ்வொரு மாகாணத்தவரும் உத்தியோக பூர்வமாக எழுதிப் பேணி வருகின்றனர். இத்தகைய நிகழ்ச்சிகள் எழுதப்பட்டுள்ள ஆவணங்கள் நி-லோ-பி-ச (நிலபித — நிலநிறச் சேமிப்பு) என அழைக்கப்படும். இவ் ஆவணங்களிலே நன்மை தீமை பற்றிய நிகழ்ச்சிகள், அதிர்ஷ்டம், துரதிர்ஷ்டமான சம்பவங்கள் யாவும் கூறப்பட்டுள்ளன'[82] என்பதாம். மேலும் கி பி 11ம் நூற்றாண்டுத் தொடக்கத்தில் இந்தியாவுக்கு வந்த அல்பிரூனி எனும் அராபிய அறிஞர் சமகாலத்திலே வடமேற்கு இந்திய எல்லையிலாட்சி செய்த இந்துஷாஹி மன்னரின் வம்சாவளிகள் நகர் கோட் எனுமிடத்திலே பட்டுத்துணியிலெழுதப் பட்டுப் பேணப்பட்டமையினைக் குறிப்பிடுகிறார்.[83] இவ்வாறு மன்னர் வரலாறு பற்றிய ஆவணங்கள் பேணப்பட்டன.[84] இதற்குத் தமிழகமும் புறநடையன்று. இவ்வாறு இல்லாவிடில், பல்லவர்[85] பாண்டியர்[86] சோழர்[87] ஆகியோரின் நீண்ட பிரசஸ்திகள், நெடுங்காலத்திற்கு முற்பட்ட மன்னர் வரலாறுபற்றி எவ்வாறு கூற முடியும்? சங்க நூல்கள், சிலப்பதிகாரம் மணிமேகலை போன்ற இலக்கிய நூல்களிலே வரும் சில குறிப்புகளை மட்டும் பயன்படுத்திப் பிரசஸ்திபாசிரியர் கூறியிருப்பர் எனக் கொள்ளுவதற்குத் தக்க சான்றுகளில. பிரதேசவாரியான தேசீயம் இந்தியா அடங்கலும் குறிப்பிட்ட காலப் பகுதியிலிருந்து மொழிவாரியாக நிலவி வந்துள்ளது. தமிழகத்திலே மொழிவாரியான தேசீயம் சங்ககாலத்திலே நிலவிவந்துள்ளது. இக்கருத்துத் தமிழகம், எனத் தமிழ்மொழி நிலவிய பிரதேசத்தைக் குறிப்பிட்டுள்ளமையினாலும் தண்டமிழ், செந்தமிழ், நற்றமிழ் என அடைமொழிகளுடன் தமிழ் எனும் பதம் சங்க நூல்களிலும், அவற்றையொட்டி எழுந்த சிலப்பதிகாரம், மணிமேகலை முதலியனவற்றிலும் வருவதாலும் நன்கு புலனாகும்.[88]

பண்டைத் தமிழகத்தினைப் பொறுத்தவரை இந்தியாவின் பிற மாநிலங்களில் இல்லாத சிறப்பு ஒன்று உண்டு. அதாவது, பழையகாலம் தொட்டுச் சில அரசவமிசங்கள் நெடுங்காலமாகப் பல நூற்றாண்டுகளாக ஆட்சி செய்தமையாகும். சேரர், சோழர்,

பாண்டியர் வமிசங்கள் (சில இடைவெளி விட்டு) ஆயிரத்துக்கு மேற்பட்ட (சுமார் கி மு 6— கி. பி. 1.ம் நூற்றாண்டு வரை) ஆண்டுகளாக ஆதிக்கம் பரந்த அளவிலோ, குறுகிய அளவிலோ செலுத்தி வந்தமை கவனித்தற்பாலது. இவர்களிலே பேரரசுகள் அமைத்துப் பிற நாடுகள் சிலவற்றிலும் ஆதிக்கத்தினை விரிவுபடுத்திய இடைக்காலப் பாண்டியரும், சோழரும் தம் முன்னோர்களைப் பிரசஸ்திகளிலே நினைவுகூர்ந்தனர். அவர்களைப் புகழ்ந்து புகழ் மாலைகளை யாத்து ஆதரவு பெற்று மகிழ்ச்சியடைந்த புலவர்கள் பிரசஸ்திகளைச் சமகால மன்னரின் பிரசஸ்திகளாக மட்டுமன்றி அவர்களின் வமிசப் பிரசஸ்திகளாகவே இயற்றியுள்ளனர்.

எனவே, பாண்டிய சோழ வமிசப் பிரசஸ்திகளுக்கான முற்பட்டகாலச் செய்திகளை இவற்றின் ஆசிரியர் வரலாற்று ரீதியில் எழுதப்பட்டுள்ள ஆவணங்கள், இலக்கிய மரபுகள் செவிவழி மரபுகள் ஆகியனவற்றில் ஒன்றிலிருந்தோ, பலவற்றிலிருந்தோ பெற்றிருப்பர். கரிகாலன் போன்ற சங்ககால மன்னர் சிலர் தாமியற்றிய சாதனைகளாலே மக்கள் உள்ளங்களைக் கவர்ந்தனர். அவர்களின் சாதனைகள் சிலவற்றைக் கருவாகக் கொண்டு பல கதைகள் உருவாகின. இது பற்றிப் பேராசிரியர் கே. எ. நிலகண்ட சாஸ்திரி குறிப்பிட்டுள்ளார்.[89] தமிழகத்திலே மட்டுமன்றித் தமிழகத்திற்கு வெளியே உள்ள ஆந்திரதேசம் போன்ற பிறமாநிலங்கள் சிலவற்றிலும் கரிகாலன் பற்றிய கதைகள் நிலவின.[90] ஆகவே, பிரசஸ்திகள் கூறும் பொருள், வரலாற்று ரீதியிலான சம்பவங்கள், பழைய ஆவணங்கள், மரபுவழிக் கதைகள் முதலியனவற்றை ஓரளவாவது கொண்டுள்ளன எனலாம் இலக்கிய ரீதியிலே நோக்கும் போது பாண்டிக்கோவை, கலிங்கத்துப்பரணி, மூவருலா போன்ற நூல்களிலே வரலாற்று நிகழ்ச்சிகள் இலக்கிய வடிவிலே கூறப்பட்டுள்ளன. இது பற்றிப் பிறிதொரு கட்டுரையிலே விரிவாக ஆராயப்படும். எடுத்துக்காட்டாகக் கலிங்கத்துப் பரணியிலே வரும் இராசபாரம்பரியம் எனும் பகுதியினைச் சுட்டிக் காட்டலாம்.

மெய்க்கீர்த்தியினை முதலில் உருவாக்கியவர் எவர் ஆயினும் அவரின் வரலாற்றுணர்வும், மதிநுட்பமும் நன்கு குறிப்பிடற்பாலன. இந்தியச் சாசனவியலிலே பொதுவாகக் காணப்படும் இலக்கியப் பண்பு இங்கு காணப்படுகிறது. ஆனால் பிற இந்தியச் சாசனவியலிலே காணப்படாத அமிசம் ஒன்று கவனித்தற்பாலது. அதாவது, இதன் தொடக்கத்திலே வரும் முத்திரைச் சொற்றொடர் இஃது எந்த அரசனுடையதென்பதை மிகத் தெளிவாகக் காட்டும். இத்தகைய முறை இந்தியாவின் பிற மாநிலங்களிலுள்ள சாசனங்களிலே காணப்படாத ஒன்றும். ஆனால், மெய்க்கீர்த்தி ஆசிரியரின் பெயரோ பிற விபரங்களோ கூறப்படுவதில்லை. ஆனால், பிரசஸ்தியின் ஆசிரியர் பெயர் பொதுவாக முடிவிலே கூறப்படுவது கவனித்தற்குரியது. எடுத்துக் காட்டாக, சுந்தர சோழனின் அன்பில் செப்பேடுகளிலுள்ள பிரசஸ்தி எழுதிய மாதவப்பட்டயஜ்வன்,[91] பல்லவ நந்திவர்மனின் காசக்குடி செப்பேடுகளிலுள்ள உதயேந்திரம் பிரசஸ்தியினை எழுதிய பரமேசுவரன்[92] முதலியோரைக் குறிப்பிடலாம். இவ்வாறு பிரசஸ்தியிலே புகழப்படும் மன்னர் மட்டுமன்றி, அதனை எழுதிய ஆசிரியர் பெயர் அவரின் மூதாதையர், அவரின் தொழில் முதலியனவும் கூறப்படுதல் கவனித்தற்பாலது. இஃதும் ஒருவகையிலே ஆசிரியரின் வரலாற்றுணர்வினைக் காட்டுகிறது. அவர் அனுமதேயமாக இருக்க விரும்பிலர். மெய்க்கீர்த்தியிலே சமகால மன்னரே புகழ்ந்துரைக்கப்படுகிறார். ஆகவே கூறப்படும் விடயம் சமகாலத்ததே.

இவ்விருவகைப் பிரபந்தங்களிலும் கூறப்படும் விடயம் காலமுறைப்படி எடுத்துரைக்கப்படுகின்றதா? என்பது அடுத்து எழும் கேள்வி. பிரசஸ்தியிலே கூறப்படுவன இந்திய அரசியற் கோட்பாட்டிற்கமைய மன்னர் மேற்கொள்ளும் திக்குவிசயம் பற்றிய மரபு வருணனைகளைப் பின்பற்றிக் கூறப்பட்டிருக்கலாம். இதன்படி பொதுவாக அரசன் தனது அரசினைச் சூழ்ந்துள்ள அயலரசுகளுக்கு எதிராக இடமிருந்து வலமாகத்திக்குவிஜயத்தினை மேற்கொள்ளுவான்.

இவ்வாறே எல்லா மன்னரும் செயலாற்றினர் எனவும் கொள்ள முடியாது. சந்தர்ப்பம், சூழ்நிலை, தேவை முதலியனவற்றிற் கேற்பவே திக்குவிஜயம் நடைபெறும். இவ்வாறு கூறப்படும் வருணனைகளிலே சம்பவங்கள் யாவும் கால வரன்முறைப்படி முழுமையாகக் கூறப்படாவிடினும், பெருமளவு கூறப்படுகின்றன எனலாம். மெய்க்கீர்த்தி சமகால மன்னனின் வெற்றிகளைப் பெருமளவு காலமுறைப்படி எடுத்துரைக்கும். ஆகவே ஓர் அரசனின் ஆரம்பக்கால மெய்க்கீர்த்திகளுடன் இறுதிக்கால மெய்க்கீர்த்திகளை ஒப்பிட்டு நோக்கும்போது, மெய்க்கீர்த்தி எவ்வாறு காலமுறைப்படி வளர்ந்து செல்கிறது என்பதை அவதானிக்கலாம். இதே வேளையில் ஒரே அரசனின் சமகால மெய்க்கீர்த்திகளுடன் பிரசஸ்திகளை ஒப்பிட்டு நோக்கும் போது, இவ்விரண்டிற்குமுள்ள ஒற்றுமை, வேறுபாடுகள் தெட்டத் தெளிவாகும்.

மெய்க்கீர்த்தி சமகால மன்னரையே சிறப்பாகப் புகழ்ந்துரைப்பதாலே, இதிலே, பௌராணிக இதிஹாஸ மரபுகள் அதன் முதற் பகுதியில் இடம் பெறுவதில்லை. கூறப்படும் பொருள் தொடக்கத்திலிருந்தே விதந்துரைக்கப்படும். ஆனால், பிரசஸ்திகளிலே, பௌராணிக, இதிஹாஸ மரபுகள் முற்பகுதியிலே விரிவாகவோ சுருக்கமாகவோ இடம் பெறும். நீண்டகால வரலாற்றினைப் பிரசஸ்தி எடுத்துரைப்பதாலே, குறிப்பிட்ட அரச மரபிற்குத் தொன்மையும், தெய்விக இயல்பும் சிறப்பும், உயர்வான உரிமையுமளித்தற்கான வகையில் அம்மரபின் தோற்றம் கூறப்படும். எடுத்துக்காட்டாகப், பாண்டியர், சோழர் வரலாற்றினை முறையே கூறும் வேள்விக்குடிச் செப்பேடுகள், திருவாலங்காட்டுச் செப்பேடுகள் முதலியன வற்றைக் குறிப்பிடலாம். எடுத்துக்காட்டாக, முன்னையதிலே, ஊழிமுடிவின்பின் உலகினைக் காத்தற்காகச் சிருஷ்டி கர்த்தாவினாலே சந்திரனிலிருந்து இம்மரபு தோன்றியமை பற்றியும், இம்மரபிற்கு அகத்திய முனிவர் குலகுருவாக விளங்கினார் எனவும் கூறப்படுகிறது.[93] பின்னையதிலே சோழமரபு சூரியனிடமிருந்து தோன்றியது பற்றியும், உண்மையான சோழமன்னருக்கு முன்வாழ்ந்த பௌராணிக மன்னர் சிலர் பற்றியும் கூறப்படுகிறது.[94] இவ்வாறு ஆளும் அரச குலங்களுக்குப் பெருமதிப்பு அளிக்கும் வகையில் பிரசஸ்தி கூறும் பாங்கு ஆரம்ப காலத்திலே வட இந்தியாவிலெழுந்த குப்த பிரசஸ்திகளிற் காணப்படவில்லை. ஆனால் குப்தருக்குச் சமகாலத்திலே ஆட்சி செய்த தக்கண, தென்னிந்திய அரசர்களின் பிரசஸ்திகள் சிலவற்றிலே பௌராணிக மரபுகள், இயல்புகள் காணப்படுகின்றன. எடுத்துக்காட்டாக, வாகாடகர், கதம்பர், பல்லவர் சாசனங்கள் சிலவற்றினைக் குறிப்பிடலாம்.[95] ஆனால், தொன்றுதொட்டு நிலவிய தமிழக மூவேந்தர் குலச் சாசனங்களிலே கி. பி. ஏழாம் நூற்றாண்டின் பின் இவ்வியல்புகள் காணப்படுகின்றன. அகில இந்தியச் சாசன ரீதியிலே நோக்கும் போது கி. பி. ஏழாம் நூற்றாண்டு தொடக்கம் மேற்குறிப்பிட்ட இயல்புகள் பல இடங்களிலும் நிலவுவதைக் குறிப்பிடலாம். ஆனால், வரலாற்று ரீதியிலே நோக்கும் போது, இத்தகைய பௌராணிகப் பகுதிகளை எளிதிலே நீக்கி விட்டு வரலாற்றுச் சார்பான பகுதிகளை நுணுகி ஆய்தல் அவசியமாகின்றது.

இவ்விரு வகையான பிரபந்தங்களும், பெரும்பாலும் செய்யுள் வடிவிலேதான் அமைந்துள்ளன. எனவே, புலவர்கள் தத்தம் புரவலரையும் அவரின்முன்னோரையும்தத்தம் கற்பனசக்திக்கும் கவிதையாற்றலுக்கு மேற்பப் புகழ்ந்துரைப்பதற்கு வாய்ப்புகள் உள்ளன. உவமைகள் உருவகங்கள், பிற அணிகள், பௌராணிக, இதிஹாஸ வீரர் கதைக் குறிப்புகள் முதலியன இடம் பெற்றுள்ளன. இவற்றினால், இவை கூறும் பொருளின் வரலாற்றியல்பு பாதிப்படைகின்றது. நிகழ்ந்தவற்றை மிகைபடாதும், குறைபடாதும் நிகழ்ந்தவாறு எடுத்துரைப்பதே வரலாறு. வரலாற்றிலே கற்பனசக்திக்கோ கவிதை ஆற்றலுக்கோ இடமில்லை. ஆகவே, பௌராணிக, இதிஹாஸ, கவிதை இயல்புகள் மேற்குறிப்பிட்ட பிரபந்தங்களிலே காணப்படுவதால், இவை

கூறும் செய்திகளை முற்றிலும் பொய்க் கீர்த்திகளென ஒதுக்கி விட முடியாது. ஏற்கனவே, குறிப்பிட்டவாறு வரலாற்று ரீதியிலான செய்திகளிவற்றின் அடிப் படையிலே காணப்படுகின்றன. ஆகவே, வரலாற்றுத் தொடர்பற்றவையினைக் களைந்து வரலாற்றுச் சார்பானவற்றை வரலாற்று ஆய்வாளன் தெரிந்து எடுத்துக் கொள்ள வேண்டும். இத்தகைய ஆய்விலே இவை கூறும் பொருள் கூறப்பட்டிருக்கும் விதம், மன்னரையும், பிறரையும் புகழ்வதற்குக் கையாளப்பட்டுள்ள வழிவகைகள் அலசி ஆராயப்பட வேண்டும். அது மட்டுமன்றி இவை கூறும் பொருள் சமகாலப் பிறசாசனங் கள், இலக்கிய மூலங்கள், பிற தொல் பொருளியற் சின்னங்கள் ஆகியவற்றுடன் ஒப்பிட்டு, ஆராயப்பட்டு எந்த அளவிற்கு உறுதிப் படுத்தப்படலாம் என்பதும், இதன் பின் இதனை எந்த அளவிற்கு வரலாற்று ரீதியிலேற்றுக் கொள்ளலாம் என்பதும் கவனிக்க வேண்டியவை. வரலாறு பற்றிய பல்வேறு மூலங்கள் தரும் சான்றுகளை நுணுகி ஆராய்ந்தே வரலாற்றுண்மையினை அறிதல் அவசியமாகும். குறிப்பிட்ட மெய்க் கீர்த்தியிலோ, பிரசஸ்தியிலோ குறிப்பிட்ட சம்பவம் கூறப்படுவதாலதனை மேலெழுந்த வாரியான வரலாற்றுண்மையாக ஏற்றுக் கொள்ளமுடியாது.

இவ்வாறு நோக்கும் போது பல்லவர் பாண்டியர், சோழப் பெருமன்னர் காலப் பிரசஸ்திகளின் வரலாற்றியல்பிலே அடிப் படை மாற்றங்கள் அதிகமில்லை. இவை காலத்தால் முந்தியனவாயினும், பிந்தியன வாயினும், வரலாற்று நோக்கிலே ஒருமைப் பாடு உள்ளது. ஆனால் காலத்தால் முந்திய பிந்திய மெய்க்கீர்த்திகளிலே வரலாற்றியல்பு நன்கு பாதிக்கப்பட்டுள்ளது. சோழப் பெரு மன்னர், அவர்களை யடுத்துப் பதின்மூன்றும் நூற்றாண்டுத் தமிழகத்திலே ஆதிக்கம் பெற்ற பாண்டியப் பெருமன்னர் மெய்க் கீர்த்திகளின் வரலாற்றியல்பு பெருமளவு ஒரே மாதிரியாகவே இலங்குகின்றது. ஆனால், மிகப் பிற்பட்டகால – கி. பி. பதினைந்தாம். பதினாறும் நூற்றாண்டு காலத்திய பாண்டி யரின் மெய்க்கீர்த்திகளின் வரலாற்றியல்பு குன்றி அவை பெருமளவு பொய்க்கீர்த்தி களாகவும் காணப்படுகின்றன.[96] தம் குலப் புகழ் மங்கிய காலத்திலே ஆட்சி செய்த பாண்டியர் சிற்றரசராகவே இருந்த போதி லும் குலப்புகழ் சிறப்புற்றோங்கிய கால நிலையிற் போன்று தம்மைக் கருதிப் புகழ் மாலைகள் எழுதுவித்துள்ளனர் போலும். ஆகவே, காலம் செல்ல மெய்க்கீர்த்திகளின் வரலாற்றியல்பு குன்றிச் செல்வதை அவதானிக்கலாம். ஆகவே, பிரசஸ்திகள், மெய்க்கீர்த்திகள் ஆகியனவற்றின் வரலாற் றியல்பும், முக்கியத்துவமும் வெள்ளிடைமலை. "கல்லிலும், செப்புத் தகடுகளிலும் பொறிக்கப்பட்டுள்ள பிரசஸ்திகளிலே பெரும் பாலும், மன்னரைப்பற்றியும் அவரின் மூதாதையரைப் பற்றியுமுள்ள பல விபரங் களிடம் பெற்றுள்ளன. எனவே, இவை ஆதிகால, மத்தியகால இந்திய வரலாற்றினை நன்கு ஒழுங்குபடுத்திக் கூறுவதற்கு மிக முக்கியத்துவம் வாய்ந்தவை. குறிப்பாக வேறு எம் மூலங்களிலும் பெறமுடியாத தகவல்கள் பல இவற்றின் மூலமே அறியப் படுகின்றன",[97] எனப் பிரபல இந்தியச் சாசனவியலாளரும், வரலாற்றுப் பேராசிரியரு மான தினேஸ் சந்திர சேர்கார் குறிப் பிட்டுள்ளார். இக்கூற்றுத் தமிழகப் பிரசஸ்தி களுக்கும், மெய்க்கீர்த்திகளுக்கும் மிகப் பொருத்தமானது.

"இந்தியர் வரலாற்றுணர்வில்லாதவர் கள். அவர்கள் தங்களது வரலாற்று ஆவணங்களைப் பாதுகாத்து வைக்கவில்லை என்பது ஒரு பொது ஜன நம்பிக்கை. ஆனால் இந்தியர் தங்களது ஆவணங்களைப் பாது காத்துத்தான் வைத்திருக்கிறார்கள். எவை முக்கியமானவை எனப் பண்டைய இந்தியர் கள் கருதினார்களோ, அவற்றையெல்லாம் காப்பாற்றி வைத்திருக்கிறார்கள். மரபுவழிப் பட்டியல்கள், கோவிலொழுகுகள், விஹாரை வரலாறுகள் போன்றவையெல்லாம் குறிப் பிட்ட நிறுவனங்களின் சரித்திரங்களாகக் கிடைக்கின்றன. இவை வரலாற்று மரபின்

மூலப்பகுதிகளே'',[98] எனப் பேராசிரியர் ரோமிலா தாபர் இந்திய வரலாற்று மரபு பற்றிக் குறிப்பிட்டுள்ளார். இத்தகைய உண்மையான வரலாற்று மரபு மதிப்பீட்டிலே பிரசஸ்திகளுக்கும், மெய்க்கீர்த்திகளுக்கும் முக்கியத்துவம் உண்டு.

பிரசஸ்திகளும் மெய்க்கீர்த்திகளும் சாசனவியலின் பகுதிகளாகவே விளங்குகின்றன. இவற்றிலே ஆதிகால இந்தியர் பயன்படுத்திய சக, விக்கிரம கலியுக போன்ற ஆண்டுகள் நன்கு பயன்படுத்தப்படாமை குறைபாடே. மரபுகள், கவிதை ரீதியிலான குறைபாடுகள் சில ஏற்கனவே சுட்டிக் காட்டப்பட்டுள்ளன. அரசியல், நிருவாக, சமய, சமூக, பண்பாட்டு நிலைகள் யாவற்றினையும் முழுமையாகக் கொண்டு பூரணமான நாகரிக நிலையினை இவை பிரதிபலிக்காவிடினும், வரலாற்றின் சில முக்கியமான பகுதிகளையாவது இவை உள்ளடக்கி, வேறு பல மூலங்களினூற் கிடைத்தற்கரிய வரலாற்றுச் செய்திகளை ஓரளவாவது எடுத்தியம்புகின்றன. இவ்வகையிலே, இடைக்காலத் தமிழக வரலாற்றினை அறிதற்கான வரலாற்று மூலங்களில்வற்றின் முக்கியத்துவம் தெளிவு. இவை கிடைக்காவிடின், தமிழகத்தின் மாபெரும் மன்னரான முதலாம் ராஜராஜன், முதலாம் ராஜேந்திரன், ஜடாவர்மன் சுந்தரபாண்டியன் போன்றோரைப் பற்றிய பல விபரங்கள் எமக்குக் கிடைத்திரா; இடைக்காலத் தமிழக வரலாறு பற்றி எழுதிய ஆராய்ச்சியாளர் இவற்றைப் பயன்படுத்தியே வரலாற்று நூல்களை எழுதியுள்ளனர். ஆனல், தமிழகத்தில் இன்னும் பதிப்பிக்கப்படாத பெருந்தொகையான பிரசஸ்திகள், மெய்க்கீர்த்திகள் உள்ளன. இவை நன்கு ஆராயப்படின் தமிழகவரலாறு மேலும் நன்கு வெளிச்சமடையும்.

மேலும், 'பொதுவான, நுணுக்கமான அடிப்படையிலே உண்மையான வரலாற்றினை எழுதுவதற்கான வரலாற்றுணர்வு ஆதி இந்தியர் மத்தியிலே நிலவியது என்பது ஐயத்திற்கிடமாகும்''[99] என மேலைத்தேய இந்திய சாசனவியலாளர்களிலொருவரான ஜே. எவ். விலீற் போன்றோர் இந்திய வரலாற்று மரபு குறித்துக் கூறியவை ஓரளவே சரியென்பதை எடுத்துக்காட்டுவதற்கு மேற் குறிப்பிட்ட பிரபந்தங்களும் ஒரு முக்கியமான காரணியாகும்.

''செவ்வையான இலக்கிய மூலங்களில்லாமையினாலே சாசனவியல் இந்தியவரலாற்று மூலங்களிலே மிக முக்கியத்துவம் வகிக்கின்றது.''[100] எனவே, குறைகள் காணப்படினும் தமிழக வரலாற்றினை அறிதற்கான மூலங்களிலே பிரசஸ்திகளும், மெய்க்கீர்த்திகளும் முக்கியமான இடம் வகிக்கின்றன. இவ்விருவகைப் பிரபந்தங்களிலும், இந்திய சாசனப் பொதுவியல்பு பிரசஸ்தியினூலும், தமிழகத்தின் தனித்தன்மை மெய்க்கீர்த்தியினூலும் புலனுகின்றன எனவும் கொள்ளலாம்.

## அடிக்குறிப்புகள்

73. சந்திவிச்கிரஹிக குமாராமாத்ய மஹாதண்டநாயக, C. I. I. Vol. III. p.6- 17, l. 32
74. E I. Vol. 17, P. 303, l. 139-140
75. S. I. I., Vol. 2, Part 3
76. E. I. Vol. 17, pp 298—309
77. S. I. I, Vol. III., Part 3, pp. 383—439
78. S. I I. vol. 3 part 1 No 4_etc
79. Namalinganusasanam I. 5
80. Arthasastra Tr. by R. Shamasastry 61—62
81. Yajnavalkyasmrti, III 318-320
82. அ. Watters T. On Yuan Chwang's Travels in India Ed. by T. W. Rhys Davids and S. W. Bushall, Vols. I-II. London, 1904—1905 p. 154
    ஆ. Beal, Samuel (Tr.) Travels of Hiouen Tsang (Chinese account of India) Vols. I—IV, Calcutta, 1957—1958. p. 155
83. Sircar D. C. Indian Epigraphy, Delhi, 1965, p. 14

84. அ. Sircar D. C. மேற்படி 14—15

ஆ. Phillips C. H. (Ed) Historians of India, Pakistan and Ceylon, Oup pp. 15-16

85. அடிக்குறிப்பு 75 பார்க்க

86. „ 76 „

87. „ 77 „

88. சிவசாமி வி., தமிழும் தமிழரும், உதயதாரகை, யாழ்ப்பாணம், 10-9-71, 17-9-71, 1-10-71, 8-10-71,

89. Nilakanta Sastri K. A, Studies in Cola History and Administration, Madras 1932, pp 19—72

90. அ. Nilakanta Sastri K. A., மேற்படி

ஆ. Madras Hindu Weekly Magazine 2-10-1960.

91. S. I. I.. Vol. II, Part III p. 372. Verse 5

92. E. I., Vol. XV, p. 70, Verse 46

93. அடிக்குறிப்பு 76 பார்க்க

94. அடிக்குறிப்பு 77 பார்க்க

95. Sircar D. C., Select Inscriptions—, Vol I, Calcutta, 1965, pp. 431, 475, 462 etc

96. எடுத்துக்காட்டான அரிகேசரி பராக்கிரம பாண்டியனின் மெய்க்கீர்த்தி.

அ. T. A. S. Vol. I. No. II pp. 4-5

ஆ. சுந்தரேச வாண்டையார் வை. (பதிப்பு) முப்பது கல்வெட்டுகள், சென்னை, 1967, ப. 154—160

97. Sircar D. C., Epigraphy, Delhi, 1965, pp. 4—6

98. ரோமிலா தாபர், வரலாறும் வக்கிரங்களும், சென்னை, 1972, ப. 8

99. Sircar D. C., மே. கு. நூ. ப. 13

100. அ. Sircar D. C. மே. கு. நூ. ப. 7

ஆ. Nilakanta Sastri K. A., Sources of Indian History, Madras, 1964, P. 23

இ. 10 Pandya Copper Plates, Madras 1967, p. 1

# சின்னண்ணன் சின்னத்தம்பி கதை

எஸ். வரதராசுலு

கொங்கு நாட்டுக்கதைப் பாடல்களில் சின்னத்தம்பி—சின்னண்ணன் கதை சமூக அமைப்பில் அண்ணன் தம்பியர், அவன் மனைவியரிடையே உறவுகளினால் ஏற்படும் சிக்கலைக் காட்டுகிறது. அண்ணன் மனைவியோடு தம்பிகள் உறவு கொள்ளலாம் என்ற சமூகப்பழக்கத்திற்கு விரோதமாக தனிவுடைமை தோன்றிய பின்னர், தனக்குப் பிறக்கும் மகன் தன் சொத்தையுடைய வேண்டும் என்ற அண்ணனுடைய உணர்வு வலுப்பெறுகிறது. எனவே அனுமதிக்கப்பட்ட பாலுறவு உரிமைகள் காலங் கடந்தவையாகின்றன. அதன் விளைவாகத் தோன்றிய மாறிய அண்ணன்—தம்பி உறவை இக்கதை வருணிக்கிறது. தம்பிக்கும் அண்ணன் மனைவிக்கும் பாலுறவு உண்டு என்பதும், அவள் இவனையே பெரிதும் நேசித்தாள் என்பதும், அவள் தம்பியின் உடலோடு சேர்ந்து உடன்கட்டையேறினாள் என்பது வலியுறுத்தும். மாண்டல்பாம் தமது இந்தியாவின் சமூக அமைப்பு என்ற நூலில் குடும்பம் என்ற பகுதியில் அண்ணன்—தம்பி உறவு என்ற உட்பகுதியில் இச்சமூக உறவு பற்றிக் குறிப்பிட்டுள்ளார். Indian Antiguity என்ற பத்திரிகையில் மைசூரில் ஒரு அதிகாரியாக இருந்த Fleet என்பவரும் இந்த உறவைக்குறிப்பிட்டுள்ளார்.

நா. வா.

நாட்டுப்புறக் கதைப் பாடல்கள் தமிழகத்தின் பலபகுதிகளிலும் பாடப்படுகின்றன. அவற்றுள் நல்லதங்காள் கதைப் பாடல் தமிழகம் முழுவதிலும் பாடப்படாவிட்டாலும் அல்லியரசாணி மாலை, பவளக்கொடி மாலை, ஏணியேற்றம் போன்ற புராணக் கதைப் பாடல்களும், தேசிங்குராசன் கதை. மதுரைவீரன் கதை, இராமப்பையன் அம்மானை, கட்ட பொம்மன் கதை ஆகிய வரலாற்றுக் கதைப் பாடல்களும் பல மாவட்டங்களில் பாடியுள்ள கதை பாடல்கள் ஆகும். முத்துப்பட்டன் கதை, சின்ன நாடான் கதை, கௌதல மாடன் கதை ஆகிய சமூகக் கதைப் பாடல்கள் திருநெல்வேலி கன்னியாகுமரி மாவட்டங்களில் வில்லிசைப் பாடகர்களால் பாடப்படுகின்றன.

இவைகளைத் தவிர இன்னும் பல்வேறு கதைப் பாடல்கள் தமிழகத்தின் மூலை முடுக்குகளில் பாடிவரக் கூடும். ஆய்வாளர்கள் முயன்று தொகுத்தால் அப்படிப்பட்ட பாடல்களை வெளிக் கொணர இயலும்.

இங்கு தருமபுரி மாவட்டம் ஊத்தங்கரை வட்டாரத்தில் வழங்கி வரப்படும் ஒரு கதைப் பாடல் ஆய்வுக்கு எடுத்துக் கொள்ளப்படுகிறது. இப்பாடலுக்கு நாட்டுப் பாடகர்கள் எவ்விதத் தலைப்பும் கொடுக்கவில்லை. ஆகையால் கட்டுரையாசிரியரால் இப் பாடலுக்கு 'தம்பியைக் கொன்ற அண்ணன்' என்று பெயர் கொடுக்கப்பட்டுள்ளது.

ஒரு ஊரில் ஓர் அண்ணன், தம்பி, அண்ணனின் மனைவி ஆகியோர் ஒரே குடும்பமாக வசித்து வருகின்றனர். ஒரு நாள் அண்ணனும் தம்பியும் காட்டுக்குப் போகிறார்கள். தம்பி காட்டில் நெடுந் தொலைவு சென்று மான்களின் அடியைக் கண்டதாகச் சொல்கிறான். அவன் தம்பியை வீட்டிற்குச் சென்று அம்புகளை எடுத்து வருமாறு சொல்கின்றான். தம்பி வீட்டிற்குச் செல்லுகிறான். தன் அண்ணியாரிடம் அம்புகளை எடுத்துத் தருமாறு கேட்கிறான். அவள் குழந்தை மடி மீது இருப்பதாகக் கூறுவதால் அம்புகளை எடுத்துச் செல்லத் தாமதமாகிறது. தனது மனைவியும் தம்பியும் தகாத முறையில் நடந்து கொண்டதாக அண்ணன் சந்தேகங் கொள்கின்றான். தனது தம்பியைத் தீர்த்துக் கட்ட முடிவு செய்கின்றான். மானை வளைத்து வருமாறு தம்பிக்குக் கூறுகின்றான். தம்பி மானை வளைத்து வரும் போது மானின் மீது

அப்பு எய்வது போலத் தனது தம்பியின் மீது அம்பெய்து கொன்று விடுகின்றான். வீட்டுக்குச் சென்ற மூத்தவனிடம் அவனது மனைவி 'இளையவன் எங்கே? என்று வினவுகின்றாள். மான் மீது எய்த அம்பு தம்பியின் மார்பில் தவறிப் பட்டு இறந்ததாக அண்ணன் கூறுகின்றான். அவள் காட்டை நோக்கி வருகின்றாள். ஆடு மாடு மேய்ப்பவர்களிடம் தன் மைத்துனனைப் பற்றி வினவுகின்றாள். அவர்கள் அவனது முடிவைக் கூறுகின்றார்கள். கட்டைகளை அடுக்கி நெருப்பை மூட்டி அதில் தனது மைத்துனரைத் தூக்கி வைக்குமாறு வேண்டுகிறாள். நெருப்புப் பற்றி எரியும் போது அந்த நெருப்பில் தானும் பாய்ந்து உயிரை மாய்த்துக் கொள்ளுகின்றாள்.

வேட்டையைத் தொழிலாகக் கொண்ட சமுதாய அமைப்பு மறைந்து நிலவுடைமைச் சமுதாயம் வளர ஆரம்பிக்கிறது. அக்கால கட்டத்தில் வேட்டை முறைகளும் பழக்கத்தில் இருந்தன. பூகோள ரீதியாக மலையடிவாரங்களில் விவசாயத்தைத் தொழிலாகக் கொண்ட மக்கள் விவசாயம் நடைபெறும் பருவங்களைத் தவிர மற்றக் காலங்களில் வேட்டைக்குச் செல்வதைத் தொழிலாகக் கொண்டிருந்தனர். இக்கதை வழங்கும் ஜவ்வாது மலையின் அடிவாரப் பகுதிகளில் வசிக்கும் பெரியவர்களை விசாரித்ததில் சமீப காலம் வரை ஊரைச் சுற்றி அடர்ந்த காடுகள் இருக்குமென்றும் மான், பன்றி கடம்பை ஆகியவற்றை இங்குள்ள மக்கள் வேட்டையாடுவது வழக்கம் என்றும் கூறுகின்றனர்.

இக்கதையில் அம்புகளை எடுத்து வரச் சொன்னதாகத்தான் கதையின் ஆரம்பத்தில் பாடப்படுகிறது. பிற் பகுதியில் மார்பில் குண்டுபட்டு மாய்ந்ததாகப் பாடப்படுகிறது. இது பாடலின் பிற்கால வளர்ச்சியைக் காட்டுகிறது. நிலவுடைமை தோன்றிய பின் சமூகத்தில் ஆண் ஆதிக்கம் உச்ச நிலையை அடைகிறது. உடைமை ஆணிற்குச் சமூக அந்தஸ்து வழங்கியதுடன் அண்ணன் தம்பி பங்காளி தகராறுகளையும் தோற்றுவிக்கிறது. மனைவி சமூக அந்தஸ்திலிருந்து கீழிறக்கப் படுகின்றாள். அவளது ஒழுக்கம் கண்காணிப்பிற்குள்ளாகிறது. மனைவி மட்டும் உயர் ஒழுக்கம் உள்ளவளாக இருக்க வேண்டும் என்றும் அதே வேளையில் கணவன் தான் விரும்பிய வண்ணம் நடக்க உரிமை பெற்றவன் என்ற நிலை ஏற்படுகிறது. இவ்வகைச் சமுதாயத்தில் பொருந்தாத் திருமணங்கள் நிகழ்கின்றன. திருமண எல்லைகளுக்கு அப்பாலும் பாலுறவுகள் நிகழ்வது இவ்வகைச் சமுதாய அமைப்பில்இயற்கையே. இது கணவன் மனைவி உறவைச் சிக்கலாக்குகிறது. சம்பந்தப்பட்ட ஆண்களிடையே நீங்காத கசப்புணர்வை உண்டாக்குகிறது. இப் பின்னணியில் இக்கதைப் பாடலைப் பார்ப்போம்:-

**அண்ணன் :**

காட்டுக்குப் போன தம்பி
என்னென்ன அடியைக் கண்டே?

**தம்பி :**

புழுதிலே அடியைக் கண்டேன்!—ரெண்டு
புள்ளி மானும் மேயக் கண்டேன்!
சேத்திலே அடியைக் கண்டேன்!— ரெண்டு
செல்ல மானும் மேயக் கண்டேன்!

**அண்ணன் :**

சின்ன வீட்டைத் திறந்தல்லவோ
சின்னம்பை எடுத்து வாரும்
பெரிய வீட்டைத் திறந்தல்லவோ
பெரியம்பை எடுத்து வாரும்

தம்பி வீட்டிற்குச் சென்று தன் அண்ணியாரைப் பார்த்துக் கேட்கின்றான்.

**தம்பி :**

அண்ணியாரே அண்ணியாரே— எங்கள்
அண்ணனுக்கும் தேவியாரே!
சின்னவீட்டைத் திறந்தல்லவோ
சின்னம்பை எடுத்துத் தாரும்!
பெரிய வீட்டைத் திறந்தல்லவோ
பெரியம்பை எடுத்துத் தாரும்!

**அண்ணி :**

பாலு அடுப்புமேலே! உங்கள் அண்ணன் பெத்த
பாலகனும் மடிமேலே!

சோறு அடுப்பு மேலே! உங்கள் அண்ணன் பெத்த
சுந்தரனும் மடி மேலே!
சாறு அடுப்பு மேலே! உங்கள் அண்ணன் பெத்த
சந்திரனும் மடிமேலே
கூழு அடுப்புமேலே! உங்கள் அண்ணன் பெத்த
குழந்தைபதும் மடி மேலே

இவ்வாறு அவள் சொல்கிருள். பின்னர் சிறிது நேரங்கழித்து அம்பினை எடுத்துக் தருகிருள். தம்பி கால தாமதமாக வருவதைக் கண்ட அண்ணன் அவன் மீது ஐயம் கொள்கின்ருன். கால தாமதத்திற்கான காரணத்தை வினவுகின்ருன். தம்பி தனது அண்ணி தாமதப்படுத்தி விட்டதாகச் சொன்னுல் அவள் மீது அண்ணன் கோபித்துக் கொள்வானே என்று தனது தாமதத்திற்கு வேறு ஒரு காரணத்தைச் சொல்கிருன்.

அண்ணன் :

எந்நேரம் போன தம்பி —நீ
இந்நேரம் ஆனதென்ன?

தம்பி :

படிக்கார பறையருக்கு
படியளக்க நேரமாச்சி
கூலிக்காரப் பறையருக்கு
கூலியளக்க நேரமாச்சு

இவ்வாறு சொன்னவுடன் இது மூத்தவனின் ஐயத்தை அதிகப்படுத்துகிறது. தனது உணர்ச்சியை அடக்கிக் கொள்கிருன். தம்பியைப் பழி வாங்கத் திட்டம் தீட்டுகிருன். நெடுநாட்களாக அவன் மனதில் இப்படியொரு சந்தேகம் இருந்திருக்க வேண்டும். இன்று அதற்கு ஒரு முடிவு கட்டத் தீர்மானித்தான். தனது தம்பியைப் பார்த்துக் கூறுகிருன்.

அண்ணன் :

மானை வளைச்சு வாரும்!
மதுர மரம் சேந்து வாரும்!
முசலை வளைச்சு வாரும்
முருங்கை மரம் சேந்து வாரும்

தம்பி :

அந்த மானேடும் ஓட்டமெல்லாம்
நான் ஓடி வெல்லுவேனு?

மானின் பின்னர் ஓடிக் களைத்துப்போன தம்பி இயலாமையைத் தெரிவிக்கின்ருன். இந்நேரத்தில் மானின் மீது அம்பெய்வதைப் போல் தம்பியின் மார்பின் மீது அம்பெய்து விடுகின்ருன். தம்பி துடிதுடித்துக் கீழே விழுவதைக் கண்டவுடன் தான் அறியாமல் செய்து விட்டதாகப் பசப்புகிருன்.

அண்ணன் :

மானுக்குப் பட்ட குண்டு— உனக்கு
மார்பிலே பட்டதடா!
முசலுக்குப் பட்ட குண்டு— உனக்கு
முதுகிலே பட்டதடா!
அந்த மானை எடுப்பேனு— தம்பி
உன்னை எடுப்பேனடா!

தம்பி அண்ணனின் சூழ்ச்சியைப் புரிந்து கொள்கிருன். தன்னை எடுத்துப்போவது அவ்வளவு முக்கியமல்ல என்றும் மானை எடுத்துச் செல்லுமாறும் கூறுகிருன்.

தம்பி :

என்னை எடுத்துப் போனுல்— மதுரையில் கீரபெண்களும்
பக வேட்டை என்று சொல்லுவார்கள்[1]
மானை எடுத்துச் செல்லும்—என் அண்ணுவே
நீர் போய்ச் சொல்லும்

மூத்தவன் வீட்டுக்கு வருகின்ருன். அவனுடைய மனைவி மைத்துனனைப் பற்றி வினவுகிருள்.

அண்ணி :

இருவரும் சென்றவங்க— என்
மைத்துனரைக் காணயில்லை

அண்ணன் :

நட்ட நடுக்காடு மதுர மரம் ஓரத்திலே
மானுக்குப் பட்ட குண்டு— உன
மைத்துனர்க்குப் பட்டதடி!

---

[1] பக—பெரிய (Baha), வட்டார வழக்கு

